வெளியீடு எண் : 651.

உ

சிவமயம்

# பார்த்திபபூசா விதி



திருவாவடுதுறை ஆதீனம் (2013)

விலை ரூ. 25 — 00

உ

சிவமயம்

# பார்த்திப பூசா விதி

இது

திருவாவடுதுறை ஆதீனம்

24ஆவது குருமகாசந்நிதானம்

**ஸ்ரீலஸ்ரீ அம்பலவாண தேசிக**

**பரமாசாரிய சுவாமிகள் அவர்கள்**

திருவுளப்பாங்கின் வண்ணம்

ஆதீன ஆன்மார்த்த மூர்த்தி ஸ்ரீ ஞானமாநடராசப் பெருமான்

**ஆனித் திருமஞ்சன விழா மலராக**

வெளியிடப்பெறுகிறது.

**திருவள்ளுவர் ஆண்டு 2044**

**மெய்கண்டார் ஆண்டு 790**

**விஜய ஆண்டு ஆனி 30**

**14.07.2013, ஞாயிறு**

## திருவாவடுதுறை ஆதீனம்

**வெளியீடு எண்: 651**

சிவமயம்



ஆதீனக் குருமுதல்வர் ஸ்ரீ நமசிவாய மூர்த்திகள்

## குருமரபு வாழ்த்து

கயிலாய பரம்பரையில் சிவஞான
போதநெறி காட்டும் வெண்ணை
பயில்வாய்மை மெய்கண்டான் சந்ததிக்கோர்
மெய்ஞ்ஞான பானு வாகிக்
குயிலாரும் பொழில்திருவா வடுதுறைவாழ்
குருநமச்சி வாய தேவன்
சயிலாதி மரபுடையோன் திருமரபு
நீடூழி தழைக மாதோ.

- காஞ்சிப் புராணம்.
( மாதவச் சிவஞான யோகிகள்).

# ஆதீனக்குருமுதல்வர் அருள்வரலாற்றுச் சுருக்கம்

உலகம் ஓர் குலம்; உலகு அனைத்தும் இன்புற வேண்டும் என்ற பரந்தமனம் படைத்தது ஆச்சாரியப் பரம்பரை. திருக்கயிலையில் தோன்றிய இப்பரம்பரை காலம் பல கடந்து இடையறாது இந்நாள் வரை வளர்ந்து வருகிறது. கயிலைப் பரம்பரையின் மெய்கண்ட சந்தான ஆச்சாரியர்களில் ஸ்ரீ உமாபதி சிவாச்சாரியரிடம் உபதேசம் பெற்ற ஸ்ரீ அருள்நமசிவாயரிடம் தீட்சை பெற்றவர் ஸ்ரீ சித்தர் சிவப்பிரகாசர். அவரிடம் சிவஞான அபிஷேகமும், உபதேசமும், ஆச்சாரிய பரம்பரையைப் பாதுகாத்து வர திருவாணையும் பெற்று, திருவாவடுதுறையில் ஆதீனத்தைத் தோற்றுவித்த முதற்பெரும் குருமூர்த்திகள் ஸ்ரீ நமசிவாயமூர்த்திகள்.

இவர்கள் சோழ மண்டலத்தில் நாகை மாவட்டம் மயிலாடுதுறைக்கு மேற்கே 3 கி.மீ தொலைவில் அமைந்த மூவலூர் என்னும் ஊரில் பரம்பரைச் சைவ வேளாளர் குலத்தில் தோன்றியவர்கள். இவர்களது பிள்ளைத் திருநாமம் வைத்தியநாதன் என்பது. இளம் பிராயத்தில் இவர்கள் தம் பெற்றோருடன் புள்ளிருக்கு வேளூரில் (வைத்தீஸ்வரன் கோயில்) ஸ்ரீ வைத்தியநாத சுவாமியை வழிபட்டுத் திருவருளில் ஒன்றிய சிந்தையினராக மனமுருகி நின்றபோது, பெருமானே ஒரு சிவாச்சாரியர் திருமேனி தாங்கி வந்து சிவலிங்கத் திருமேனி ஒன்றினைத் தந்தருளிய பேறுடையவர்கள்.

தல யாத்திரையாகத் தம் அடியார் திருக்கூட்டத்துடன் மூவலூர் சேர்ந்த ஸ்ரீ சித்தர் சிவப்பிரகாசர், சிறிய பெருந்தகையாக விளங்கிய வைத்தியநாதரைக் கண்டார்கள். சிவஞானப் பேற்றிற்கு உரிய குறிகளையும் திருவருட் குறிப்பையும் உணர்ந்து, பெற்றோர் இசைவுடன் பிள்ளையைத் தம்முடன் அழைத்துக் கொண்டு திருவாவடுதுறையை அடைந்தார்கள்.

அங்கு ஸ்ரீ சித்தர் சிவப்பிரகாசர் அப்பிள்ளைக்கு ஞானதீட்சை புரிந்து நமசிவாயம் எனத் தீட்சாநாமம் சாத்தி, குரு பரம்பரையில் தாம் பெற்ற சிவஞான உபதேசத்தை அருளிச் சிவஞானானந்த அனுபவம் கைவருமாறு அனுக்ரகம் செய்தார்கள்.

குருமரபில் தாம் பெற்ற ஸ்ரீ உமாபதி சிவாச்சாரியர் பூஜை செய்த ஸ்ரீ ஞான மாநடராசப் பெருமானையும், தம்முடைய ஆத்மார்த்த மூர்த்தியையும் பூஜித்து வரும் அதிகாரத்தையும் வழங்கியருளி னார்கள். தாம் வீற்றிருந்த இடத்தில் வரைகீறி அமைக்கப்பெற்ற அறையுள் அமர்ந்து சைவ சித்தாந்த மரபு தழைக்கச் சிவஞான உபதேசம் செய்துவர ஆணையருளி, தாம் திருமறைக்காட்டிற்கு எழுந்தருளினார்கள்.

ஸ்ரீ நமசிவாய தேசிக மூர்த்திகள் தம் ஞானாசிரியர் திருவாணையின் வண்ணம் அவர் வகுத்த அறையிலிருந்து, வரும் பக்குவ ஆன்மாக்களுக்குச் சிவஞான உபதேசம் அருளிச் சுத்தாத்துவித சைவ சித்தாந்தப் பரிபாலனம் செய்து வந்தார்கள்.

இவ்வண்ணம் ஆதீன முதற்பெரும் குருமூர்த்திகளாக வீற்றிருந்து சுத்தாத்துவித சித்தாந்த நன்மரபு தழைக்கச் செய்த ஸ்ரீ நமசிவாயமூர்த்திகள், தங்கள் குரு சந்தானம் வளர்ந்தோங்கி வர, அம்பலவாண தேசிகருக்கு ஞானாபிஷேகம் செய்து துவிதீய ஆச்சாரியராக அமைத்து, ஒரு தை மாதம் அசுவதித் திருநாளில் சித்தாந்த சுத்தாத்துவித முக்தி அடைந்தருளினார்கள். ஆதீனக் குருமுதல்வர் குருமூர்த்தத்தில் நாள்தோறும் இருகாலம் பூஜைகள் நடைபெற்று வருகின்றன. மாதந்தோறும் அசுவதி நட்சத்திரத்தில் குருமூர்த்திகளுக்குச் சிறப்பு வழிபாடுகளும் தோத்திர நூல்கள் பாராயணமும் செய்யப்பட்டு வருகின்றன.

பிரதி வருடம் தை மாதம் அசுவதித் திருநாளில் (மகரத் தலைநாள்) ஆதீன முதற்பெரும் குருமூர்த்திகளாக விளங்கும் **ஸ்ரீ நமசிவாய மூர்த்திகளின்** குருபூஜை விழா கொடியேற்றத்துடன் தொடங்கி தினமும் காலை, இரவு இருவேளைகளிலும் அபிஷேக ஆராதனைகளோடு பத்து நாட்கள் சிறப்பாக நடைபெற்று வருகின்றன.

மேலும் ஸ்ரீ நமசிவாயமூர்த்திகளின் திருமேனியானது மூவலூர் (அவதார இல்லம்), காசி கண்ணப்பசாமி மடம், திருநெல்வேலி நெல்லையப்பர் கோயில், விக்கிரமசிங்கபுரம் சிவந்தியப்பர் கோயில், திருநெல்வேலி சந்தி விநாயகர் கோயில்,

சுசீந்திரம், மதுரை, கிளை மடங்கள், பொதிகையடி குருபூஜை மடம், காசி தர்மம் விநாயகர் திருக்கோயில் ஆகிய தலங்களில் பிரதிட்டை செய்யப் பெற்று, பூஜைகளும் நடைபெற்று வருகின்றன. தை அசுவதி நன்னாளில் ஷெ தலங்களில் சிறப்பு ஆராதனைகளும் மாகேசுவர பூஜைகளும் நடைபெறுகின்றன.

இவ்வாறாக ஸ்ரீ நமசிவாயமூர்த்திகளின் வழிவழி வருகின்ற சிவஞான உபதேச, அபிஷேக பரம்பரையில், இந்நாளில் இவ்வாதீனத்து 24ஆவது குரு மகாசந்நிதானமாக **ஸ்ரீலஸ்ரீ அம்பலவாண தேசிக பரமாசாரிய சுவாமிகள்** சித்ராசன சிவஞானபீடத்தில் எழுந்தருளி அருளாட்சி செய்து வருகின்றார்கள்.

இவர்கள் 22.11.2012ல் ஞானபீடம் ஏற்றருளிய நாள் முதல் சித்தாந்த சைவ பரிபாலனமும் செந்தமிழ் பரிபாலனமும் ஆதீன சம்பிரதாயப்படி மரபு மாறாமல் அருளாட்சி புரிந்தருளுகின்றார்கள்.

01.12.2012ல் 23ஆவது குருமூர்த்திகள் ஸ்ரீ சிவப்பிரகாச தேசிகர் அவர்களின் குருபூஜை விழா 10 நாட்கள் சிறப்புற நடத்தி பட்டணப்பிரவேசமும் செய்தருளினார்கள்.

10.01.2013 முதல் 19.01.2013 முடிய ஆதீனக் குருமுதல்வர் ஸ்ரீ நமசிவாய மூர்த்திகளின் தை அசுவதி குருபூஜைப் பெருவிழா 10 நாட்கள் சிறப்புற நிகழ்த்தியருளினார்கள். வேதாகம, சித்தாந்த, திருமுறை சொற்பொழிவுகளும் விருதுகளும், நூல் வெளியீடும், திருமுறை இன்னிசை கச்சேரிகள் முதலான கலை நிகழ்ச்சிகளும் நடைபெற்றன. 19.01.2013ல் குருமுதல்வர்க்கு சிறப்பு அபிஷேக ஆராதனைகளும் இரவு பட்டணப்பிரவேசமும் சிவஞான கொலுக்காட்சியும் தந்தருளினார்கள்.

05.12.2012ல் ஆறுமுகநாவலர் விழாவில் இலங்கை சைவத் தொண்டன் சபைக்கு சைவச் சுடர் நிலையம் எனும் விருதும் பொற்கிழி ரூ.5000/-மும் வழங்கியருளினார்கள்.

20.04.2013ல் மாதவச் சிவஞான சுவாமிகள் சித்திரை ஆயில்ய சிறப்பு வழிபாடுகள் விக்கிரமசிங்கபுரம், காஞ்சிபுரம், பேரூர், சுசீந்திரம், திருவாவடுதுறை ஆகிய இடங்களில் நடைபெற்றன. தலைமை மடத்தில் அ.ம. லெக்ஷ்மிபதிராஜ் அவர்களுக்கு சித்தாந்தச்

செம்மணி எனும் விருதும் பொற்கிழி ரூ.5000/-மும் வழங்கி யருளினார்கள். சிவஞானத் தெள்ளமுதம் எனும் நூல் வெளியீடும், சிவஞான சுவாமிகள் கட்டுரைப் போட்டியில் வென்றவர்களுக்கு பாராட்டிதழ்களும், பரிசுப்பொருட்களும் வழங்கியருளினார்கள்.

ஆதீனக் கிளை மடங்களான திருநெல்வேலி ஈசான மடம், மதுரை தானகோனேரியப்ப கட்டளை மடம் ஆகியவைகளில் திருப்பணி நடைபெற்று புத்தாக்கம் செய்வித்து திறந்து வைத்தருளி னார்கள். மேலும் மற்ற ஆதீனக் கிளை மடங்களிலும் அருளாணை யின் வண்ணம் திருப்பணிகள் நடைபெற்று வருகின்றன.

01.05.2013ல் ஆதீனத்திற்குச் சொந்தமான திருவாவடுதுறை ஸ்ரீ நினைத்ததை முடிக்கும் மகாமாரியம்மன் திருக்கோயிலுக்கு மகா கும்பாபிஷேகம் செய்வித்தருளினார்கள். விஜய ஆண்டு ஆவணி 16 (30.08.2013) நல்லூர் ஸ்ரீ கல்யாண சுந்தரேஸ்வரர் ஆலயத்திற்கும் விஜய ஆண்டு ஆவணி 26 (11.09.2013) திருவீழிமிழலை ஸ்ரீ வீழிநாதசுவாமி திருக்கோயிலுக்கும் அஷ்டபந்தன மகா கும்பாபிஷேகங்கள் செய்வித்தருளுகின்றார்கள். பெண்ணாகடம் ஸ்ரீ மெய்கண்டார் திருக்கோயில், ஆவுடையார் கோயில் ஸ்ரீ சிவயோக பெருமாள் திருக்கோயில் திருப்பணிகள் நடைபெற்று வருகின்றன.

ஆதீன ஆளுகையில் தொடக்க, நடுநிலை, மேனிலைப் பள்ளிகள் நன்கு நிருவகிக்கப்பட்டு அருளுவதுடன் திருவிடைமருதூர் அருகிலுள்ள முத்தூர் கலைமகள் உதவிபெறும் தொடக்கப் பள்ளியை ஆதீன ஆளுகைக்கு 17.04.2013ல் ஏற்றருளி பரிபாலனம் செய்தருளுகின்றார்கள். திருவாவடுதுறையில் கலை அறிவியல் மற்றும் தொழில் நுட்பக் கல்லூரிகள் தொடங்குவதற்கு அருளாணை தந்து ஆவன செய்தருளுகின்றார்கள்.

தமிழக அரசால் ஏற்படுத்தப்பட்டுள்ள இந்து சமய அறநிலையத்துறையில் உயர்நிலை ஆலோசனைக் குழுவில் அலுவல் சாரா உறுப்பினராகவும் செயலாற்றியருளுகின்றார்கள்.

உ

சிவமயம்



திருவாவடுதுறை ஆதீனம்

24ஆவது குரு மகாசந்நிதானம்

**ஸ்ரீலஸ்ரீ அம்பலவாண தேசிக**

**பரமாசாரிய சுவாமிகள்**

# பதிப்புரை

**வேட்க எத்துறை வேதியன் எம்இறை**
**ஆக்கள் ஏறுவர் ஆன்ஐஞ்சும் ஆடுவர்**
**பூக்கள் கொண்டு அவன் பொன்அடி போற்றினால்**
**காப்பர் நம்மைக் கறைமிடற்று அண்ணலே.**

ஆன்ம நாயகனாகிய சிவபெருமான் திருவடி நீழலில் வாழ்வதாகிய சிவானந்தம் ஒன்றற்கே உரியன ஆன்மாக்கள். இப்பேரானந்தத்தை அடைந்து இன்புற வொட்டாது ஆன்மாக்களின் அறிவு இச்சை செயல்களை மறைத்து அநாதி காலமாகவே அவற்றிற்குக் குற்றம் செய்வன மலம். மலக் குற்றத்தை நீக்குதற்கு உரிய பக்குவ காலம் அமையும் பொழுது சிவபிரான் அதனை நீக்கி அருள் செய்வான். அந்தப் பக்குவ காலம் ஆன்மாக்களுக்குச் சிவார்ச்சனையாகிய சிவபூசை யாலேயே உண்டாவதாகும். சிவபெருமானே முழுமுதற் கடவுள் என்று உணர்ந்து, சிவாகம நெறிப்படி சிவதீட்சை பெற்று, ஆசிரியர் அனுமதிப்படி சிவபூசையைச் செய்தாலல்லாமல், சிவபூசையால் ஆகும் சிறந்த பலன் கைகூடாது. இத்தகு சிவபூசைப் பேறும் முன்னைத் தவம் உடையவர்க்கன்றி ஏனையர்க்கு எய்துவதில்லை.

சிவபூசை, பரார்த்தம் ஆன்மார்த்தம் என இரு வகைத்தது. சிவாலயங்களில் சிவாகம பிரதிட்டை விதிப்படி பூசைகள் செய்யப்படுவது பரார்த்தமாகும். இது உலகத்தவர்கள் சிவனருள் பெறுதற் பொருட்டு ஆகும். ஆன்மார்த்த பூசையாவது தன்பொருட்டு அச்சிவாகம விதிப்படி செய்து வருவதாகும்.

சிவபூசை விதிகளைக் கூறும் சிவாகம பத்ததிப்படி இவ்வாதீனத்தில் அநுட்டிக்கப்பெற்று வரும் பூசை முறைகளை விளக்கும் 170 ஆண்டுகளுக்கு முற்பட்டதான பழமையான கையெழுத்துப் பிரதி நூலொன்று ஆதீன நூலகம் சரசுவதி மகாலில் உள்ளது. பீஜாக்ஷரங்களோடு அமையும் மந்திரங்கள் சில அப்பீஜங்கள் இன்றி இந்நூலில் எழுதப்பெற்றுள்ளன.

பூசை விதிமுறை பற்றிய இப்பழமையான நூல் அவ்வக் காலங்களில் வெளிவந்து சிவபூசைச் செல்வர்களுக்குப் பயன்பட வேண்டும்; சிவபூசை இதுகாறும் ஏற்கப்பெறாதவர் களுக்கு அதனில் ஆர்வம் விளைவிக்கவேண்டும் என்று ஆதீனத்து இருபத்து நான்காவது குருமகாசந்நிதானமாக எழுந்தருளியிருந்து சிவஞானச் செங்கோல் ஓச்சியருளும் ஸ்ரீலஸ்ரீ அம்பலவாண தேசிக பரமாசாரிய சுவாமிகள் அவர்கள் திருவுளம் கொண்டருளிய வண்ணம் இந்நூல் வெளி வருகின்றது.

சிவநேய அன்பர்கள் இந்நூலினைப் பெற்று, ஆசிரியர்பால் முறையாக தீட்சைகளும் ஆன்மார்த்த மூர்த்தி எழுந்தருளப் பண்ணுதலும் கொண்டு மெய்யன்புடன் சிவபூசையினை இடையீடில்லாது செய்து இம்மையில் வானவர் செல்வமும் அம்மையில் பிறவி நீக்கமும் சிவானந்தமும் எய்தி இன்புற விரும்புகிறோம்.

திருவாவடுதுறை ஆதீனம்.

# பார்த்திப பூசாவிதிக் கோட்டம்

வடமேற்கு
- வாயு -

வடக்கு
- குபேரன் -

வடகிழக்கு
- ஈசானன் -

13 மகா கணபதி | 14 மகா லட்சுமி | 21 பிரம குரு | 20 விஷ்ணு குரு | 19 கந்த குரு | 18 அம்பிகை குரு | 17 ஸ்ரீகண்ட குரு | 16 அநந்த குரு | 15 சதாசிவ குரு

9 மகா காளை | 22 மனோன்மணி | 26 சண்டேசர்

14 யமுனை | 13 அத்திர துவார பாலகர் | தேஜஸ் சண்டர்

5 சரஸ்வதி | 2 உமா தேவி

6 லட்சுமி | 1 சிவசூரிய மூர்த்தி

4 கணபதி | 3 பிரத்யுஷா தேவி

மேற்கு
- வருணன் -

கிழக்கு
- இந்திரன் -

4. வைராக்கியாசனம் 5. ஐஸ்வர்யாசனம்

6. பத்மாசனம்

1. அநந்தாசனம்

3. ஞானாசனம் 2. தன்மாசனம்

இச் சடுத்தாசன மீது லிங்கத்தை வைக்க

கோமுகை வடதிசையாயிருக்கும்படி வைக்க

8 கங்கை | 12 வாஸ்துபதி பிரமா

7 நந்தி | 24 யோக குரு பீடம் | 23 சிவ குரு பீடம் | 25 வித்தியா குரு பீடம்

4 விசேஷார்க்கியம் | 3 ஆசமனார்க்கியம் | 2 பாத்தியார்க்கியம் | 1 சாமனியார்க்கியம் | அபிஷேக கலசம் | திரு மஞ்சனக் குடம்

தென்மேற்கு
- நிருதி -

தெற்கு
- இயமன் -

தென்கிழக்கு
- அக்கினி -

சிவ பூசை.

உ

சிவமயம்

# பார்த்திப பூசாவிதிக் கொத்து

| | |
|---|---|
| ஸ்நானம், அநுட்டானம், | சந்தியோபாசனம். |
| இடம் பண்ணல் | நமஸ்காரம் |
| சுவசத்தால் கோடு இடல் | விண்ணப்பம் |
| எண்திக்கினும் இருதையத்தால் | சுவாகாந்தார்க்கியம் |
| பத்திரமிடல் | காளகன்னி முத்திரை |
| திருமஞ்சன சுத்தி | லிங்க முத்திரை |
| சாமானிய அர்க்கியம் தாபித்தல் | நமஸ்கார முத்திரை |
| சூரிய பூசை | ஐமுக முத்திரை |
| மேலைத் துவார பூசை | இருதயாதியங்கம் |
| மூஇடையூறு | ஏகத்துவம் |
| அஸ்திர துவாரபாலர் பூசை | வௌஷடாந்த அர்க்கியம் |
| பூத சுத்தி | தாளத்திரயம் |
| அந்தரியாக பூசை | திக்குபந்தனம் |
| தான சுத்தி | அவகுண்டனம் |
| பாத்தியாசமன அர்க்கியம் | தேனுமுத்திரை |
| தாபித்தல் | பகாமுத்திரை |
| திரவிய சுத்தி | பரமீகரணம் |
| மந்திர சுத்தி | பாத்தியாசமன அர்க்கியம் |
| சடுத்தாசனம் | சுந்தம்புஷ்பம் அறுகு அட்சதை |
| லிங்க சுத்தி | தூபதீபம் |
| வடக்குத் துவாரம் | ஆசமனார்க்கியம் |
| மகா கணபதி, | அஷ்டபுஷ்பம் |
| மகாலட்சுமி | அபிஷேகம் |
| சத்தகுரு பூசை | திருவொற்றாடை |
| ஆதார சத்தி அர்ச்சனை | விபூதி சாத்தல் |
| சிவாசனம் | மூலத்தால் ஒரு புஷ்பம் |
| சிவமூர்த்தி | பொன்அரைஞாண் |
| தெண்டபங்கி | பட்டுக் கௌபீனம் |
| முண்டபங்கி | தங்கப் பரிவட்டம் |
| வித்தியா தேகம் | சந்தனம் களப கஸ்தூரி |
| நேத்திரம் | குங்கும் கோரோசனை |
| ஆவாகனம் | புனுகு பச்சை கற்பூரம் |
| ஸ்தாபனம் | ஆடை ஆபரணாதிகள் சாத்தல் |

சந்நிதானம்
கண்டமாலை ஆரம் சவடி
ஏகவடம் சவுக்களி
எருக்கம்பூமாலை, வில்வமாலை
தும்பை மாலை பூணூல்
தண்டை சதங்கை சிலம்பு
இவைகள் சாத்தல்
தத்துவத்திரயம்
இண்டைமாலை, தொடர்மாலை
கொன்றை மாலை
சாத்தல்
ஆசமன அர்க்கியம்
மனோரத முத்திரை
பஞ்சப்பிரம சடங்கம்
இஷ்டகாமியம்
இலயாங்கம்
போகாங்கம்
ஏகத்துவம்
பாத்தியாசமன அர்க்கியம்
மனோன்மணி பூசை
சுவாமிக்குத் தூபதீபம்
நிவேதனம்
கரோத்துவதரம்
பாத்தியாசமன அர்க்கியம்
தாம்பூலம்
ஆசமன அர்க்கியம்
பரிவாரங்கட்கு நிவேதனம்
அர்க்கியம்
சுவாமிக்குத் தூபதீபம்
சோடசோபசாரம்
பாத்தியாசமன அர்க்கியம்
கந்தம் புஷ்பம் அறுகு அட்சதை
புஷ்பாஞ்சலி
நித்திய பௌத்திரம்
செபித்துச் சாத்தல்
சிவகுரு பீடம், யோக பீடம்
வித்யதிதா பீடம் பூசை
இரத்தினகிரீடம் குண்டலம்
தோத்திரம்
பிரதக்ஷிணம்
நமஸ்காரம்
வேண்டிக்கொள்ளல்
அஷ்டபுஷ்பம் சாத்தல்
சங்கீதார்ச்சனை
இரண்டாங்கால பூசை
மூன்றாங்கால பூசை
பராமுகார்ச்சனை
அர்க்கியம்
தெறித்தெழுப்பிக் கூட்டிச்
சாத்தல்
திக்கு பந்தனம்
அவகுண்டனம்
ஒடுக்கல்
பரிவார தேவதைகளை
அர்ச்சித்து அர்க்கியம்
கொடுத்து ஒடுக்குதல்
சாமானியம் ஒடுக்கல்
சண்டேஸ்வர பூசை
பாத்தியாசமன அர்க்கியம்
ஒடுக்கல்
நின்மாலிய மாற்றல்
பூமி சுத்தி
ஆசமனம்
அதரசுத்தி
தொடுமிடம்
கரசுத்தி
கரநியாசம்
அங்கநியாசம்
மூலம் அகோரம் செபித்தல்
சகளீகரணம்
விபூதி தரித்தல், சிவதரிசனம்
குரு தரிசனம்
போசனம் செய்தல்.

# அர்க்கியங்கள் கூட்டும் முறை

திருமஞ்சனக்குடத்தில் 'இருதையாய வெளஷட் ' எனக் கந்தம் புஷ்பம் அறுகு அட்சதை போட்டுச் சங்கிதையாகிய பதினோரு மந்திரங்களால் அர்ச்சித்து அம்மந்திரங்களாலேயே அபிமந்திரித்து அட்ட சங்காரம் பண்ணி அபிஷேக கலசத்தால் திருமஞ்சனம் மொண்டு மும்முறை விந்துத்தானம் வரை தூக்கி 'இருதையாய வெளஷட்' எனப் பூரித்து இங்ஙனம் திருமஞ்சனம் சுத்தி செய்க. பின்பு அபிஷேக கலசத்தால் திருமஞ்சனம் முகந்து பரிவார தேவதைகளுக்கு ஏற்பட்ட சாமானிய அர்க்கியத்திலே 'இருதையாய வெளஷட்' எனப் பூரித்து அம்மந்திரத்தினாலேயே கந்தம் புஷ்பம் அறுகு அட்சதை போட்டு ' ஓம் ஓம் ஓம் ஓம் ஓம் ஓம் ஓம்' எனப் பிரணவத்தால் ஏழ்முறை அர்ச்சித்து ஏழ்முறை அபிமந்திரித்து அட்டசங்காரம் பண்ணுக.

அதன்பின் அபிஷேக கலசத்தால் திருமஞ்சனம் முகந்து பாத்தி யார்க்கியத்தில் 'இருதையாய வெளஷட்' எனப் பூரித்து அம்மந்திரத்தினாலேயே கந்தம் புஷ்பம் அறுகு அட்சதை போட்டு இருதையம் முதலான சடங்க மந்திரங்களினால் அர்ச்சித்து அச்சடங்கத்தாலேயே அபிமந்திரித்து அட்ட சங்காரம் பண்ணிப் பின் அபிஷேக கலசத்தால் திருமஞ்சனம் முகந்து ஆசமனார்க்கியத்தில் 'இருதையாய வெளஷட்' என்று பூரித்து அம்மந்திரத்தினாலேயே கந்தம் அறுகு அட்சதை போட்டு ஈசானம் முதலான பஞ்சப் பிரமமும் இருதையம் முதலான சடங்க முகமாகிய பதினோரு மந்திரங்களால் அர்ச்சித்து அவற்றால் அபிமந்திரித்து அட்டசங்காரம் செய்த பின்னர் அபிஷேக கலசத்தால் விசேஷார்க்கியத்தில் திருமஞ்சனம் முகந்து ' சிவாய வெளஷட் ' எனப் பூரித்து அம் மந்திரத்தினாலேயே கந்தம், புஷ்பம், அறுகு, அட்சதை போட்டுச் 'சிவாசனாய நம, சிவமூர்த்தியே நம, சிவாய நம' என ஆசன மூர்த்தி மூலத்தாலும் பஞ்சப் பிரமத்தாலும்

'வித்தியாதேகாய நம' என வித்தியா தேகத்தாலும் சடங்கத்தாலும் அர்ச்சித்து அவற்றால் அபிமந்திரித்து அ. சங்காரம் பண்ணி அவ்விசேஷார்க்கியத்தால் எங்கும் புரோட்சிக்க.

இதுவே அர்க்கியங்கள் கூட்டும் முறைமையாம்.

சிவபெருமானுடைய பாதத்தில் பாத்தியத்தை 'ஓம் சிவாய நம' என நமாந்தமாகவும், முகத்தில் ஆசமனத்தை 'ஓம் சிவாய சுதா' எனச் சுதாந்தமாகவும், திருமுடியில் விசேஷார்க்கியத்தை 'ஓம் சிவாய சுவாகா' எனச் சுவாகாந்தமாகவும் கொடுப்பது விதியாதலால் சாமானிய அர்க்கியம் பரிவார தேவதைகளின் உபயோகத்திற்கும் பாத்தியாசமன விசேஷார்க்கியங்கள் சிவபெருமானுடைய உபயோகத்திற்கும் ஆம் என்றுணர்க.

சிவலிங்கம்



அறுபத்துநான்கு சிவக்ஷேத்திரங்களில்
ஆதிமூர்த்தமாக விளங்கும் சிவலிங்கத் திருமேனி

உ
சிவமயம்.

திருவாவடுதுறை ஆதீனம்

# பார்த்திப பூசா விதி

## விரிவு அட்டவணை

ஸ்நானம் அநுட்டானம் செய்து செபத்தியானம் பண்ணிச் சிவ பூசாத்தானத்திலே வைத்து வட்டகை செம்பு முதலானவற்றையெல்லாம் " அத்திராய நம" என வெள்ளையிட்டுக் "கவசாய நம" வெனக் கழுவிச் சுத்தி செய்து கூட்டிப் பூசாவேதிகையை 'அத்திராய நம' வென்று தெளித்துக் 'கவசாய நம' வென தடவி அம்மந்திரத் தினாலேயே கோடிட்டு 'இருதையாய நம' வெனக் கிழக்கு முதல் எட்டுத் திக்கினும் பத்திரம் கிள்ளி வைத்துப் பின்பு திருமஞ்சனக் குடத்திலே நிரீக்ஷணாதி நாற்சுத்தி செய்து 'கவசாய நம' வெனப் பரிவட்டத்தால் வாய்கட்டிப் பிரமாங்கத்தால் அதாவது சங்கிதை பதினொன்றால் வடித்தெடுத்து ஒரு புஷ்பம் போட்டு வைத்துக் கொண்டு பூசைக்குள்ள உபகரணங்களெல்லா வற்றையும் 'அத்திராய நம' வென ஆசாரங் கூட்டியருகே அமைத்துக் கொண்டு சந்தனக் கல்லையும் சந்தனக் கட்டையையும் 'அத்திராய நம' வெனக் கழுவிப் பூசைத் தானத்திலே வைத்துச் சந்தனமிழைத்துத் தட்டில் வைத்ததன் மீது ஒரு பத்திரம் கிள்ளி வைத்து ஆசமனம் அதரசுத்தி தொடுமிடஞ் செய்து விபூதி தரித்துக் கொண்டு கரநியாசம் அங்கநியாசம் பண்ணிப் பின்பு திருமஞ்சன சுத்தி செய்க.

திருமஞ்சனக் குடத்தில் சந்தம் புஷ்பம் அறுகு அட்சதைகளை 'இருதையாய வௌஷட்' என்று போட்டு அத்திருமஞ்சனத்தில் சங்கிதையால் அர்ச்சித்து அபிமந்திரித்து அட்டசங்காரம் பண்ணித் திருமஞ்சனத்தை விந்துத் தானத்திலேயிருக்கின்ற அமிர்த சலமாகப் பாவித்து அபிஷேக கலசத்தால் மூக்கால் முகந்தெடுத்து 'இருதையாய வௌஷட்' என்று விந்துத்தானம் வரை தூக்கிப் பூரித்து இங்ஙனம்

திருமஞ்சனத்துக்குச் செய்க. பின்பு சாமானியார்க்கியமென்னும் பரிவார தேவதைகட்கு உபயோகமாகக் கூட்டுக.

வட்டகை நான்கில் முதல் வட்டகையில் அதாவது அபிஷேக கலசத்தையொட்டி அடுத்திருக்கும் வட்டகையில் வௌஷடந்த இருதைய மந்திரத்தால் சலம் பூரித்து அந்த மந்திரத்தாலேயே கந்தம் புஷ்பம் அறுகு அட்சதை போட்டுப் பிரணவத்தால் ஏழ்முறை அர்ச்சித்து ஏழ்முறை அபிமந்திரித்து நிரீக்ஷணாதி நாற்சுத்தியும் தாளத்திரையமும் திக்கு பந்தனம் அவகுண்டனமும் செய்து தேனு முத்திரை மகா முத்திரைகளும் கொடுத்துப் பின்பு அச்சாமானிய அர்க்கியத்தில் ஒரு புஷ்பம் தோய்த்துத் தன் சிரசில் மும்முறை அத்திர மந்திரத்தால் புரோட்சித்துக் கொண்டு சூரிய பூசாத்தானமாகிய அக்கினி கோணத்திலும் மேலைத் துவார பூசாத்தானத்திலும் முக்காற் புரோட்சிக்க.

பின்பு சுவாமிக்கு அக்கினி கோணத்திலே சிவசூரியனை ஆசன மூர்த்தி மூலத்தினாலே 'ஓம் சிவசூரியாசனாய நம' 'ஓம் சிவசூரிய மூர்த்தியே நம' 'ஓம் சிவசூரியாய நம' வென அர்ச்சித்துச் சூரியனுக்கு வலப்பக்கமான வடபாகத்தில் 'உஷாதேவியாசனாய நம' 'உஷாதேவி மூர்த்தாயை நம' 'உஷா தேவியை நம' இடப்பாகமான தென்பாகத்தில் 'பிரத்துஷா தேவியாசனாய நம' 'பிரத்துஷாதேவி மூர்த்தாயை நம' 'பிரத்துஷா தேவியை நம' வென்று இரண்டு தேவிமார்களையும் ஆசன மூர்த்தி மூலங்களால் அர்ச்சித்து அவரவர் மந்திரங்களால் சுவாகாந்தமாக அர்க்கியங் கொடுத்து அபிஷேகம் செய்து மீட்டும் சுவாகாந்தமாகவே அர்க்கியம் புரோட்சித்து நமாந்தமாக அவரவர் மூலத்தாலர்ச்சனை பண்ணிக் கந்தம் புஷ்பம் அறுகு அட்சதை சாத்தித் தூபதீபம் கொடுத்து நிவேதனம் செய்து மீண்டும் தூபதீபம் பணிமாறி அர்க்கியம் கொடுத்து அர்ச்சித்துச் "சிவபூசைக்கு விக்கினம் வராமல் இரட்சிக்க" என்றிரந்து வேண்டிப் பிரார்த்தித்துக் கொண்டு பின்பு மேலைத் துவார பூசை செய்க.

மேற்படியின் தெற்கே கணபதிக்கும் கணபதியின் வடக்கே சரஸ்வதிக்கும் கணபதி சரஸ்வதிக்கு நடுவே இலக்ஷ்மிக்கும் கணபதிக்குத் தெற்கே நந்திக்கும் நந்திக்கு வடக்கே கங்கைக்கும் சரஸ்வதிக்கு வடக்கே மகா காளைக்கும், மகா காளையின் தெற்கே யமுனைக்கும் தானம் ஏற்படுத்திக் கொண்டு "ஓம் கணபதியாசனாய நம" 'ஓம் கணபதிமூர்த்தியே நம' 'ஓம் கணபதியே நம' என்றும், 'ஓம் சரஸ்வதியாசனாய நம, ஓம் சரஸ்வதி மூர்த்தாயை நம, ஓம் சரஸ்வதியை நம' வென்றும், 'ஓம் இலக்ஷ்மியாசனாய நம, ஓம் இலக்ஷ்மிமூர்த்தாயை நம, ஓம் இலக்ஷ்மியே நம' வென்றும், ' ஓம் நந்தியாசனாய நம, ஓம் நந்திமூர்த்தியை நம, ஓம் நந்தியே நம' வென்றும், 'ஓம் கங்கையாசனாய நம, ஓம் கங்கை மூர்த்தாயை நம, ஓம் கங்கையே நம' வென்றும், 'ஓம் மகாகாளையாசனாய நம, ஓம் மகா காளைமூர்த்தியை நம, ஓம் மகா காளையே நம'வென்றும், 'ஓம் யமுனையாசனாயை நம, ஓம் யமுனை மூர்த்தாயை நம, ஓம் யமுனையே நம' வென்றும் இந்தப்படியெழுவர்களையும் ஆசனமூர்த்தி மூலத்தால் அர்ச்சித்துச் சாமானியார்க்கியம் சுவாகாந்தமான அவரவர் நாம மூல மந்திரங்களாலேயே கொடுத்து அபிஷேகம் செய்து பின்னும் சுவாகாந்தமாகவே அர்க்கியம் புரோட்சித்து அவரவர் நாம மந்திரங்களில் நமாந்தம் கூட்டிக் கந்தபுஷ்பம் சாத்தியர்ச்சித்து " ஓம் சர்வேப்பியோ துவார பாலேப் பியோ நம, அடியேன் சிவனைப் பூசை பண்ணப் போகிறேன். விக்கினங்கள் வராமல் காத்தருள வேண்டும்" என்று இரந்து வேண்டி அவர்கள் அனுக்ஞை பெற்றுக் கொண்டு மூவிடையூறு தீர்க்க.

மேலே ஆகாசத்தைப் பார்த்துச் 'சிவாய நம' வென்று மூலமந்திரம் உச்சரித்து ஒரு புஷ்பம் அல்லது ஒரு பத்திரம் தெறித்துத் திவ்யமான விக்கினங்களெல்லாம் போக்கி இரு பக்கமும் 'அத்திராய பட்' என்று ஒவ்வொரு புஷ்பம் கொண்டு தெறித்துப் போக்கிப் பூமியிலும் ஒரு பத்திரங்கிள்ளி 'ஓம் ஹாம் சிலீம் பம் சும் ஹூம்பட் பாசுபதாஸ்திராய ஹூம் பண்ணமஹ'

* என்று அகோர சிவாசாரியார் பத்ததியிலுள்ள மந்திரத்தினை "ஓம் ஹாம் சிலீம் பம் சும் பாசுபதாஸ்திராய ஹூம் பட்" என்று அங்குஷ்டம் கொண்டு உச்சரித்துப் போட்டுவிட்டுப் பின்பு வலக்கால் புறவடியினாலே தாடித்துத் தட்டிப் பூமியிலுள்ள விக்கினங்களை யெல்லாம் போக்கியதாகப் பாவிக்க. இதுவே மூலவினை யூறு தீர்த்தலாம்.

இனிப் பூசா மண்டபத்துக்குப் போம்பொழுது "ஓம் சர்வேப்பியோ துவாரேப்பியோ நம, அடியேன் சிவனைப் பூசிக்கப் போகிறேன் விக்கினங்கள் வராமல் காத்துக் கொண்டருளவேண்டும்" என்று மெய்யுண்மையோடிரந்து வேண்டிக் கொண்டு இடப்பாரிசத்திலே வலக்கால் முன்னிட்டுப் போம்பொழுது கீழ்ப்படியில் சரஸ்வதிக்குக் கிழக்கே அஸ்திரத் துவார பாலரையும் அவ்வஸ்திரத் துவாரபாலருக்குத் தெற்கே நிருதி கோணத்திலே வாஸ்துபதி பிரமனையும் பத்மாசனமிட்டு எழுந்தருளப் பண்ணி யாசன மூர்த்தி மூலத்தால் அர்ச்சித்துச் சுவாகாந்தமாக அர்க்கியம் கொடுத்து அபிஷேகம் செய்து சுவாகாந்தமாகவே அர்க்கியம் புரோட்சித்து நமாந்தமாகக் கந்த புஷ்பம் சாத்தியர்ச்சனை செய்து பூசை முடித்திட்ட பின்பு முன்சொன்னவாறு இவர்களை இரந்து வேண்டிக் கொண்டு இவ்விதம் ஆலயப் பிரவேசம் செய்தபின் பூத சுத்தி செய்க.

**பூத சுத்தியின் சுருக்கம்**

சரீரத்தைத் தலைகீழாக நிற்கிற ஆலவிருக்ஷமாகப் பாவித்து இருதையம், கண்டம், தாலு, புருவமத்தி, துவாத

---

* ஓம் ஹாம் சிலீம் பம் சும் ஹூம் பட் பாசுபதாஸ்திராய ஹூம் பண்ணமஹ என்று அகோர சிவாசாரியார் பத்ததியிலுள்ளதை ஈண்டு "ஓம் ஹாம் சிலீம் பம் சும் பாசுபதாஸ்திராய ஹூம் பட்" என்று அந்த மட்டே கொள்ளத்தக்கது. சில ஏட்டுப் பிரதிகளிலே "ஓம் சிலீம் பசும் பட பாசுபத வத்திராய நம" "ஓம் சிலும்பாசுபத பத்திராய வும்படு" என்றுள்ளவையெல்லாம் கரப்பிசகால் நேர்ந்த வழுவுள்ளனவாம்.

[illegible] அக்கிரத்தால் [illegible] மேலிருக்கிற அமிர்தத்தினாலே நனைத்துத் திவ்விய சரீர வந்ததாகப் பாவித்துக் கொண்டு பின்பு அந்தரியாக பூசை செய்க.

## பூத சுத்தியின் விரிவு

சிவபூசாத்தானத்தில் திக்கு பந்தனம் அவகுண்டனம் தேனு முத்திரை மேலும் கீழும் கொடுத்த பின்பு பிராணாயாமம் கரநியாசம் அங்க நியாசம் செய்து சரீரத்திலேயுள்ள கன்மம் நீங்கும்படி நாடி சோதனை செய்க. அஃதாவது சரீரத்தை யிருபாதப் பெருவிரலினின்றும் அரையளவும் அதாவது மூலாதாரம் அளவும் இரண்டுருவாகவும் அரைக்கு மேல் சிரம் வரையில் ஒருருவாகவும், இடைபிங்கலைகளினாலே பின்னப்பட்டு இருதையம், கண்டம், தாலுமூலம், புருவநடு, பிரமரந்திரம் என்னும் இவ்வைந்து தானங்களிலும் ஐந்து தாமரை முகிழ் கீழ் நோக்கியிருக்கிறதாகவும் இடைபிங்கலைகள் மாறியேறியிருக்கின்றதாகவும் உள்துளையுடனே கூடின சுழுமுனைநாடி மத்தியிலே நிற்கின்றதாகவும் துவாதசாந்தத்திலேயிருக்கிற சத்தியினிடத்திலே நின்றும் சுழுமுனை நாடி வழியே பொழியப்பட்ட அமிர்த தாரையினாலே உள்ளும் புறம்பும் நனைந்திருக்கின்றதாகவும் தியானித்து அஸ்திர மந்திரத்தினாலே உங்காரத்திலே வாயுவை வாங்கிப் பூரக கும்பகம் செய்து கபாலத்திலே நிறுத்திக் கொண்டு 'அஸ்திராயவும்பட்' என்று சோடிகா முத்திரையினாலே ஐந்து தானத்திலும் தெறித்து ஐந்து தாமரை முகிழும் மேனோக்கியலர்ந்ததாகப் பாவித்து வாயுவை வலநாசியினாலே விடுத்து இரேசித்து மீளவும் வாயுவைப் பூரக கும்பகம் செய்து மேனோக்கியிருதைய கமலத்திலேயிருந்த

ஆத்மாவை நட்சத்திரப் பிரகாசத்தை உடையதாகவும் சாந்த பீசமாகவும் இருதையம் சம்புடமாகவும் ஊங்கார சிகாந்தத்தாகவும் புரியட்டகமெனப்படும் சூக்ஷூம சரீரத்தை விட்டு நீங்காமலிருக்கிற புருடனாகவும் சூக்குமனாகவும் ஏகனாகவும் நிராமயனாகவும் தாரகாகரமாகவும் தியானித்துச் சங்கார முத்திரையினாலே 'ஓம் ஊம் ஆம் அம் ஆம் ஊம் ஆத்மனே நம' வென்றெடுத்துத் துவாத சாந்தத்திலெழுந்தருளியிருக்கின்ற பதியிடத்தில் கூட்டுக. இதுவரையிலும் நாடி சோதனையாம்.

இனிச் சூக்குமதேக சுத்தியாகத் தத்துவங்களையொடுக்கும் விதம்: - சத்தமும் பரிசமும் சதுர்முகனிடத்திலும் ரசம் விஷ்ணுவிடத்திலும் உருவமும் கந்தமும் ருத்திரனிடத்திலும் புத்தியும் அகங்காரமும் மகேசுரனிடத்திலும் மனோவிந்து சதாசிவனிடத்திலுமாக இந்த ஐவரிடத்திலும் ஒடுக்கிக் கொள்க. இவ்வாறொடுக்கின் சூக்கும தேகசுத்தி வரும்.

இனிப் பூதசுத்தி பண்ணும் விதம்: -

முன்பு பிருதிவியைச் சோதிக்க பிருதிவி நாற்கோணமாய்ப் பொன்னிறமாய் கடின குணமாய் (ல) என்னும் அக்ஷரமாய், நிவிர்த்தி கலையாய்ச் சத்தியோசாத மந்திரமாய், அதிதேவதை பிரமாவாய், ஆயுதம் வச்சிரமாய் இப்படி எட்டடை யாளத்தையும் ஐங்குணத்தையும் உடையதாயிருக்கிற பிருதுவியைத் தியானித்து நிவிர்த்தி கலாரூபமாகப் பாவித்து " ஓம் லம் நிவிர்த்தி கலாயவும் பட்" என்று மேனோக்கி ஐந்து தரமுச்சரித்து வாயுவைப் பூரக கும்பகம் செய்து இரேசித்து கந்தம் ரசம் ரூபம் பரிசம் சத்தமாகிய ஐந்து குணமும் கெட்டனவாகப் பாவித்துப் போக்கிப் பிருதிவியை வாயுவினிடமாகச் சேர்த்துப் பிருதிவி வாயுவுக்கு ஆகாரமானதாகப் பார்க்க.

இனி அப்புவைச் சோதிக்க. அப்புவானது அர்த்த சந்திரனைப் போன்றதாய்ச் சுவேத நிறமாய் நெகிழ்ந்த குணத்தையுடையதாய் 'உவீம்' என்ற பீசமாய் 'வ' என்னும்

அக்ஷரமாய்ப் பிரதிட்டா கலையாய் வாம தேவ மந்திரமாய் அதிதேவதை விஷ்ணுவாய் ஆயுதம் தாமரைப் பூவாய் இப்படி எட்டு அடையாளத்தையும் நான்கு குணத்தையுமுடைய தாயிருக்கின்ற அப்புவைத் தியானித்து வாயுவைப் பூரக கும்பகம் செய்து மேனோக்கி 'ஓம் உ வீம் பிரதிட்டா கலாயவும் பட்' என்று நான்கு தரம் உச்சரித்து இரேசித்து ரசம் ரூபம் பரிசம் சத்த முதலாகிய நாற்குணத்தையும் போக்கி அப்புவைத் தேயுவுக்காகாரமானதாகப் பார்க்க.

இனித் தேயுவைச் சோதிக்க. தேயுவானது மூன்று கோணமாய்ச் சிவப்பு நிறமாய்க் குணஞ்சூடாய் 'உ ரூம்' என்ற பீசமாய் 'ர' என்னும் அக்ஷரமாய் வித்தியா கலையாய் அகோர மந்திரமாய் அதி தேவதை ருத்திரனாய் ஆயுதம் சுவத்திகமாய் இப்படி எட்டடையாளத்தையும் மூன்று குணத்தையும் உடையதாயிருக்கின்ற தேயுவைத் தியானித்து வாயுவைப் பூரக கும்பகம் செய்து மேனோக்கி 'ஓம் ரூம் வித்தியா கலாயவும் பட்' என்று மூன்று தரமுச்சரித்து இரேசித்துச் சத்தமுதலான மூன்று குணத்தையும் போக்கித் தேயுவை அப்புவுக்கு ஆகாரமான தாகப் பார்க்க.

இனி வாயுவைச் சோதிக்க. வாயுவானது அறுகுண மாய்க் கருமை நிறமாய்க் குணம் சலனமதாய் ஐ என்கிற பீசமதாய் "ய" என்னும் அக்ஷரமாய்ச் சாந்தி கலையாய்த் தற்புருஷ மந்திரமாய் அதிதேவதை உமாமகேச்சுரராய் ஆயுதம் அறுபுள்ளியாய் இப்படி எட்டு அடையாளத்தையும் இரண்டு குணத்தையுமுடையதாயிருக்கிற வாயுவைத் தியானித்து வாயுவை பூரக கும்பகம் செய்து மேனோக்கி 'ஓம் ஈம் சாந்தி கலாயவும்பட்' என்று இரண்டு தரம் உச்சரித்துச் சத்தம் முதலான இரண்டு குணத்தையும் போக்கி வாயுவை பிருதிவிக்கு ஆகாரமானதாகப் பார்க்க.

இனி ஆகாயத்தைச் சோதிக்க. ஆகாயமானது வட்ட வடிவாய்ப் புகை நிறம் படிக நிறமாய்க் குணம் பூரணமாய் "ஹ" என்னும் அக்ஷரமாய்ச் சாந்தியாதீத கலையாய் ஈசான மந்திரமாய் அதிதேவதை சதாசிவமாய் ஆயுதம் அமுத

விந்துவாய் இப்படி எட்டு அடையாளத்தையும் ஓர் குணத்தையும் உடையதாயிருக்கிற ஆகாயத்தைத் தியானித்து வாயுவைப் பூரக கும்பகம் செய்து மேனோக்கி 'ஓம் ஆம் சாந்தியாதீத கலாயவும் பட்' என்றொருதரமுச்சரித்துச் சத்தமாகிய வோர் குணத்தையும் போக்கி ஆகாயத்தைச் சத்தியினாலே மறைக்கப்பட்டதாகப் பார்க்க.

தேகம் காற்றிலுலர்ந்ததாகப் பாவித்து ஆகாயத்தை நித்திய தத்துவ வியாபக தத்துவ சுத்த தத்துவமான பரமாகா சத்தினிடமாகக் கூட்டி அத்திர மந்திரத்தினாலே வலக்கால் பெருவிரலில் காலாக்கினியை எழுப்பிச் சரீரமெல்லாம் வெந்து தகனப்பட்டதாகப் பாவித்துப் பொருத்தப்பட்ட பந்த மெல்லாம் நீங்கி சர்வ சூனியமாய்ச் சுத்த வெளியானதாகப் பாவித்துப் பின்பு அகாரத்திலே ஆங்காரமும் உகாரத்திலே புத்தியும் மகாரத்திலே மனமும் விந்துவிலே சித்தமும் இலயத்தானத்திலே நின்று சூக்ஷும சரீரமுண்டாயினவாகவும் விந்துவில் சிவமும் சிவத்தில் சத்தியும் சத்தியில் சதாசிவமும் சதாசிவத்தில் மகேஸ்வரனும் மகஸேஸ்வரனிடத்தில் சுத்த வித்தையும் மாயையில் வித்தியா தத்துவமும் வித்தியையில் பிரகிருதி தத்துவமும் பிரகிருதியில் குண தத்துவமும் குணத்திற் சாத்துவிக வாங்காரமும் ஞானேந்திரியமும் இராசத வாங்காரத்திற் கன்மேந்திரியமும் தாமத வாங்காரத்தில் தன்மாத்திரையும் தன்மாத்திரை ஐந்தில் பூதம் ஐந்தும் உண்டாயினவாகவும் சிந்தித்துத் துவாத சாந்தத்திலேயிருக்கிற சிவசத்தியினுடைய அமிர்த தாரையினாலே சுழுமுனா நாடிக்குள்ளும் புறம்பும் நனைந்ததாக 'ஓம் சத்தியோ வௌஷடு' வென்று உச்சரித்துச் சிந்தித்துத் துவாத சாந்தத்திலே பதியினிடமாக இருக்கின்ற ஆத்மாவை ஐங்கலைப்

---

பிருதிவி அப்புவுக்கும், அப்பு தேயுவுக்கும், தேயு வாயுவுக்கும், வாயு ஆகாயத்துக்கும், ஆகாரமானவையாய்ப் பார்க்க என்ற முறை ஏட்டுப் பிரதியிற் பிறழ்ந்து கிடக்கின்றன வாகையாலேற்றபடி கொள்க. பிரதியிலிருந்த படியேயீண்டெழுதப் பட்டிருக்கின்றன.

பிரமனைக் கொண்டிருக்கின்ற அங்க மந்திரத்தை 'ஓம் அங்கே நம' என்றுச்சரித்து வாயுவைப் பூரக கும்பகம் செய்து கொண்டு யெடுத்து இருதைய கமலமாகிய சுத்த மாயா பீடத்திலே வைத்து அருளாயிருக்கிற அமிர்தத்தினாலே யபிஷேகம் பண்ணி யங்க நியாசமும் செய்க.

இனி ஆத்மாவினுடைய இருதைய கமலத்திலே சிவனை வைத்தர்ச்சிக்கும் அந்தரியாக பூசையாவது இருதைய கமலத்திலே ஆத்மாவைத் தானாகப் பாவித்திருந்து கொண்டு மானதத்தினாலே ஸ்நானம் அநுட்டானம் செபம் செய்து, இருதையத்தைப் பூசாமண்டப மாக்கிப் பத்திரம் வைத்துக் கோடிட்டு இடம் பண்ணித் திருமஞ்சனம் திருப்பள்ளித் தாமம் சந்தனம் அபிஷேகத் திரவியங்கள் திருவாபரணம் பட்டுப் பரிவட்டம் நைவேத்தியம் மணிதூபதீபம் சங்க வாத்தியங்களும் மற்ற பூசைத் திரவியங்களும் மனத்தினாலே பாவித்து வருவித்தமைத்து வைத்துக் கொண்டு சூரிய பூசை முதலாகச் செய்து கருமை செம்மை வெண்மையாயிருக்கிற மூன்று குணத்தையுடைய நாபித்தானத்திலே கந்தமும் பீசமும் அங்குரமும் அதன்மேல் எட்டங்குலத்துடனே நாளமும் கண்டமும் எட்டு இதழுடைய வெண்டாமரையிலே இருக்கிற சோதிலிங்கந்தன்னில் துவாத சாந்தத்தினின்றும் சிவனைப் பூரக கும்பத்துடனே மூலத்தினால் ஆவாகனம் செய்க.

அமலனைத் திருமஞ்சனத்தினாலும் திருப்பள்ளித் தாமத்தினாலும் மற்றும் உண்டாகிய உபசாரங்களினாலும் புறம்பே அர்ச்சிக்குமாறு போல அர்ச்சித்துப் பின்பு சுத்தமாயை முதலாக அசுத்தமாயை ஈறாக வோமகுண்டாக்கி மெய்ஞ் ஞானாக்கினியினாலே புருவ மத்தியிலேயிருக்கிற அமிர்த தாரையினாலே ஓமம் வளர்த்தலாகிய இந்த அக்கினி காரியத்தையும் மானதமாகச் செய்து பூசையிலுள்ள பலன் களெல்லாம் பரமனுக்களித்துப் புருவ நடுவில் நின்மல மூர்த்தியாகக் கருதித் தியானம் பண்ணித் தேவி பூசை முதலியனவும் செய்து சண்டேஸ்வர பூசையையும் விதிப்படி செய்து பின் சுவாமிக்கு அர்ச்சியம் கொடுத்துவிட்டுச் "சுவாமி!

அடியேன் தெரிந்த அளவு உட்பூசை செய்து முடித்தேன். இனிப் புறப்பூசை செய்யப் போகிறேன். அப்புறப் பூசையில் பக்தியீனம் மந்திரவீனம் கிரியாவீனம் முதலிய எவ்வித ஈனங்கள் வந்தாலும் அவற்றைத் தேவரீர் இன்பமாக நினைந்து அடியேன் மேற் கருணை வைத்து மார்க்கண்டேயர்க் கெப்படி யருளியதோ அப்படியே புறப் பூசையையும் கொண்டருளியடி யேற்குக் கிருபை செய்ய வேண்டும்'' என்று வேண்டிக் கொண்டு அனுமதி பெற்றுச் சுவாமியை யிருதைய கமல சம்புடத்தில் எழுந்தருளப் பண்ணித் தோத்திரம் செய்து தியானம் பண்ணிக் கொண்டு கால்கை சுத்தி பண்ணி அகோரம் பத்துருச் செபித்துக் கொண்டு பின்பு தான சுத்தி செய்க.

பூசாத் தானத்தில் மூல மந்திரத்தை உச்சரித்து நிரீக்ஷணம் பண்ணி அத்திரத்தினாலே தாளத்திரையந்திக்கு பந்தனமும் கவசத்தால் அவ குண்டனமும் பண்ணித் திக்கு பந்தனம் அக்கினி மதிலாகவும் அவகுண்டனம் மூன்றகழாகவும் சத்தியெங்கும் நிறைந்திருக்கிறதாகவும் பாவித்துத் தேனு முத்திரை மகா முத்திரையும் "ஓம் ஆம் சத்தியே நம" வென்று மேலும் கீழுமாகக் கொடுத்துத் திரவிய சுத்தி பண்ணு முன்பாகப் பாத்தியாசமனவர்க்கியம் தாபிக்க.

சுவர்ணம் முதலாகிய வட்டகைப் பாத்திரங்களை அத்திரத்தால் விளக்கிச் சுத்த சலத்தை விந்துத் தானத்தின் அமிர்த சலதாரையாகப் பாவித்து வட்டகை மூன்றில் பாத்தியத்துக்கு "இருதையாய வௌஷட்'' என்றும், ஆசமனத்துக்கு 'இருதையாய வௌஷட்' என்றும், விசேஷார்க் கியத்துக்குச் 'சிவாய வௌஷட்' என்றும் சலம் பூரித்து அந்தந்த மந்திரங்களாலேயே அவ்வவற்றில் கந்த புஷ்பம் அறுகு அட்சதை போட்டுப் பாத்தியத்துக்கு இருதைய முதலான ஆறு மந்திரங்களினாலும் ஆசமனத்துக்குச் சங்கிதை பதினொன் றாலும் விசேஷத்துக்குச் சிவாசனம் சிவ மூர்த்தி மூலம் பஞ்சப் பிரமம் வித்தியா தேகம் இருதையாதியாறங்க மெனப்படும் சடங்கமாகிய பதினைந்து மந்திரங்களினாலும் அர்ச்சித்து அந்தந்த மந்திரங்களாலேயே அவ்வவற்றில் அபிமந்திரித்தலும் செய்க.

நிரீக்ஷணாதி நான்கு சுத்தி தாளத்திரையம், திக்குபந்தனம், அவகுண்டனம் தேனு முத்திரையாகிய அட்ட அங்கங்கள் பண்ணி மகா முத்திரையும் எல்லாவற்றிலும் தனித்தனி முறையே கொடுத்து விசேஷார்க்கியத்தில் ஒரு புஷ்பம் தோய்த்து அதனாலே தன் சிரசிலே மூன்று தரம் 'அத்திராய நம' வெனத் தன்னையும், அம் மந்திரத்தினாலேயே பூசாத் திரவியங்களையும் புரோட்சித்துத் திருமேற்பூச்சை சத்தியோ சாதத்தினாலும் திருப்பரிவட்டத்தை வாமத்தினாலும் திருவாபரணத்தை யகோரத்தினாலும் திருமாலையை ஈசானத் தினாலும் திருவமுதைத் தற்புருஷத்தினாலும் பாலை இருதையத்தினாலும் தயிரைச் சிரசினாலும் நறுநெய்யைச் சிகையினாலும் தேனை கவசத்தினாலும் சந்தனக் குழம்பை யத்திரத்தினாலும் மற்றுமுண்டான திரவியங்களைக் காயத்திரியினாலும் அபிமந்திரித்துக் கவசத்தினாலே அவ குண்டனம் பண்ணியிருதையத்தினாலே அல்லது மூலத் தினாலே தேனு முத்திரை கொடுத்து அந்தந்த மந்திரங் களினாலே மகா முத்திரையும் கொடுத்துப் பின் விசேஷார்க் கியத்தில் ஒரு புஷ்பம் தோய்த்துத் திருமஞ்சனக் குடத்திலே "ஓம் அத்திராயவும் பட்" என்று போட்டுத் திக்கு பந்தனம் அவகுண்டனம் தேனு முத்திரை மகா முத்திரை கொடுத்து இவ்விதம் திரவிய சுத்தி முடித்தபின் மந்திர சுத்தி செய்க.

தன்னாசனத்தில் "சிவாய நம" வென்றும் மார்பிற் "சிவ மூர்த்தியே நம" வென்றும் புஷ்பத்தாலர்ச்சித்து நெற்றியிலும் 'இருதையாய நம' வென்று சந்தனத் திலகமிட்டு சிரசில் 'ஓம் சிவாய நம' வென மூலத்தை உச்சரித்துப் புஷ்பத்தாலர்ச்சித்து நமோந்தமான மூலத்தை துவாத சாந்த மனவாகவும் நமோந்தமான பஞ்சப் பிரம சடங்கங்களை விந்துத்தான மளவாகவும் உச்சரித்து அபிமந்திரித்து அந்த மந்திரத்தினாலே தன்னைச் சிவமாகப் பாவித்துத் தியானம் செய்து கொண்டு சடுத்தாசனம் கற்பிக்க. சுவாமியெழுந்தருள நடுவே 'அனந்தாசனாய நம' வென்றும் அதற்கு அக்கினி கோணத்திலே அதாவது தென்கிழக்கே 'தன்மாசனாய நம' வென்றும்,

நிருதியிலே அதாவது தென்மேற்கே 'ஞானாசனாய நம' வென்றும் வாயுகோணத்திலே அதாவது வடமேற்கே 'வைராக்கியாசனாய நம' வென்றும் ஈசான திசையிலே அதாவது வடகிழக்கே 'ஐஸ்வரியாசனாய நம' வென்றும் நடுவே 'பத்மாசனாய நம' வென்றும் அர்ச்சித்தலே சடுத்தாசனம் கற்பித்தலாம். இனி இலிங்க சுத்தி செய்க.

'அத்திராய நம' வென மிர்த்திகை யெடுத்து 'அத்திராய நம' வென நீர் கொடுத்து 'இருதையாய நம' வெனப் பத்திரம் கிள்ளி வைத்து நணைந்தொருமித்தபின் அதையெடுத்து 'அராய நம' வெனப் பழுதாராய்ந்து பார்த்துப் பின்பு நன்றாகப் பிசைந்து 'வித்தியா தேகாய நம' வென்றாவது 'பினாகியே நம' வென்றாவது சுவாமி பாணித்துச் 'சூலபாணியே நம' வென்றொரு பீடத்தில் சுவாமியை எழுந்தருளப் பண்ணி 'சம்புவே நம' வென்றொரு புஷ்பம் சாத்தி 'மகாதேவாய நம' வென்று அப்பீடத்தோடே நடுப் பத்மாசனத்திருத்தி மூலத்தால் புஷ்பம் சாத்திச் சாமானியார்க்கியத்தினாலே சத்தியோசாத முதல் ஈசானம் ஈறாக ஐந்து திருமுடிகளிலும் சுவாகாந்த மூலத்தினாலே அதாவது 'ஓம் சிவாய சுவாகா' வெனக் கொடுத்துக் கூடியதை நிவேதித்துத் தூபம் தீபம் பணிமாறிப் பின் ஆசமன அர்க்கியம் கொடுத்துக் கூடியதை நிவேதித்துத் தூபம் தீபம் பணிமாறிப் பின் ஆசமன அர்க்கியம் கொடுத்துச் சத்தியோ சாதம் முதல் ஈசானம் ஈறாக ஐந்து திருமுடிகளினும் கனிட்டை முதல் அங்குட்டமீறாக அந்தந்த மந்திரங்களினாலே நியாசித்து கனிட்டை யனாமிகை நடுவேயொரு புஷ்பத்தை வைத்துக் கொண்டு சிவலிங்கத்தின் மேலே கையை வைத்துப் பஞ்சப் பிரம சடங்கத்தால் அபிமந்திரித்து அங்குட்டம் தற்சனி விரல்களினாலே 'அத்திராய நம' வென்று புஷ்பங்களைக் கழித்து உடனே கனிட்டையனாமிகை நடுவே வைத்திருக்கிற புஷ்பத்தை 'ஓம் சிவாய நம' வென்று சாத்திக் கழித்த நின்மாலியத்தை ஈசான திக்கிலே சண்டேஸ்வர பூசா நிமித்தமாக ஒரு பத்திரம் போட்டு அதன்மேல் 'இருதையாய நம' வென்று வைத்து 'அத்திராய நம' வென்று சிவலிங்கப் பெருமானைச்

சுத்தோதக சலத்தால் மூன்று தரம் அபிஷேகம் பண்ணிக் 'கவசாய நம' வென்று குச்சுப்புல் சாத்தியதாக பாவனை செய்து 'அத்திராய நம' வென்று சுத்தோதகசலம் மீட்டு மொரு கலசமபிஷேகம் பண்ணிப் பின்பு சாமானியவர்க்கியம் 'அத்திராய நம' வென்றபிஷேகித்து 'ஓம் சிவாசனாய நம' 'ஓம் சிவமூர்த்தனே நம' 'ஓம் சிவாய நம' வென்று அஷ்ட புஷ்பம் சாத்திச் சாமானிய வர்க்கியம் 'சிவாய சுவாகா' வென்று மூன்று தரம் கொடுத்துத் தூப தீபம் பணி மாறுக. இதுவே இலிங்க சுத்தியாம். இனிச் சில ஏட்டுப் பிரதியிலுள்ள இலிங்க சுத்தி வருமாறு :-

'தானே வேதிகையிலே சடுத்தாசனம் கற்பித்துச் சிவலிங்கப் பெருமானை யெழுந்தருளப் பண்ணி முன்னாட் * பரியூஷித பூசையில் காயத்திரியினாலே யொரு புஷ்பம் சாத்திச் சாமாணிய வர்க்கியத்தினாலே சத்தியோசாத முதலாக ஈசான மீறாக ஐந்து திருமுடிகளினும் சுவாகாந்த மூலத்தினாலே யர்க்கியம் கொடுத்துத் தூப தீபம் பணிமாறிச் சத்தியோ சாதம் முதலாகப் பஞ்சப் பிரமங்களினாலே கனிட்டை முதலாக அங்குட்ட மீறாக நியாசித்துப் பூசையின் மேலே கையை வைத்துப் பதினொரு மந்திரத்தினாலே அபிமந்திரித்து அத்திரத்தால் கழித்து இருதையத்தால் சண்டேஸ்வர பூசைக்கு வைத்து அத்திரத்தினாலே ஆவுடையாளையும் இருதையத்தி னாலே சிவலிங்கப் பெருமானையும் முக்கால் ஆடியருளப் பண்ணிக் கவசத்தால் குச்சுப்புல் சாத்திச் சாமானிய வர்க்கியத்தை யத்திரத்தினாலே யாடியருளப் பண்ணிச் சிவனுக்கு ஆசன மூர்த்தி மூலத்தால் அஷ்ட புஷ்பம் சாத்தி யர்க்கியம் கொடுக்க' என்பது இலிங்க சுத்தியாம். பின் வடக்குத் துவாரத்திலே சத்த குருபூசை செய்க.

சுவாமியின் பீடத்துக்கு வடமேற்கான வாயு மூலையி லே 'ஓம் மகா கணபதியாசனாய நம', 'ஓம் மகா கணபதி

---

* முன்னாள் - முதனாள்; பரியூஷிதம் - பழமை ; முதனாட் செய்யப்பட்டுப் பழமையாயிருக்கிற பூசை என்பதாம்.

மூர்த்தயே நம' 'ஓம் மகா கணபதியே நம' வென்றும் அம் மகா கணபதிக்குக் கிழக்கே 'ஓம் மகா லட்சுமியாசனாய நம', 'ஓம் மகாலட்சுமி மூர்த்தயே நம', 'ஓம் மகா லட்சுமியே நம' வென்றும் இவ்விருவர்களையும் பீடத்துக்கு வடகிழக்குக்கான ஈசான மூலையிலே ஓம் சதாசிவ குருவாசனாய நம' ஓம் சதாசிவ குருமூர்த்தனே நம' 'ஓம் சதாசிவ குருவே நம' வென்றும் இக்குருவிற்கு மேற்கே 'ஓம் அநந்த குருவாசனாய நம' 'ஓம் அநந்த குருமூர்த்தனே நம' 'ஓம் அநந்த குருவேநம' வென்றும் இக்குருவிற்கு மேற்கே 'ஓம் ஸ்ரீகண்ட குருவாசனாய நம' ' ஓம் ஸ்ரீகண்ட குருமூர்த்தனே நம' 'ஓம் ஸ்ரீகண்ட குருவே நம', வென்றும் இக்குருவிற்கு மேற்கே 'ஓம் அம்பிகை குரு வாசனாய நம', 'ஓம் அம்பிகை குருமூர்த்தாயை நம', ' ஓம் அம்பிகை குருவே நம' வென்றும் இக்குருவிற்கு மேற்கே 'ஓம் கந்தகுருவாசனாய நம', 'ஓம் கந்தகுருமூர்த்தனே நம', 'ஓம் கந்த குருவே நம' வென்றும், இக்குருவிற்கு மேற்கே 'ஓம் விஷ்ணு குருவாசனாய நம' 'ஓம் விஷ்ணு குருமூர்த்தனே நம', 'ஓம் விஷ்ணு குருவே நம' வென்றும், இக்குருவிற்கு மேற்கே ' ஓம் பிரமகுருவாசனானய நம', ' ஓம் பிரமகுருமூர்த்தனே நம', 'ஓம் பிரமகுருவே நம' வென்றும் சத்த குருக்களாகிய இவ்வெழுவர்களையும அவரவர் ஆசனமூர்த்தி மூலத்தால் இவ்விதமர்ச்சித்து அர்க்கியம் கொடுத்து மீட்டும் அர்ச்சித்து பாவனாபிஷேகம் செய்து கந்தபுஷ்பம் அறுகு அட்சதை சாத்தி அர்க்கியம் புரோட்சித்து அவரவர் மூலத்தால் பூசை செய்து " அடியேன் செய்யும் சிவபூசைக்கு யாதோர் விக்கினமும் வராமல் இரட்சிக்க வேண்டும்" என்று வேண்டிக்கொண்டு அவர்கள் அனுமதியைப் பெற்றுப் பின்பு சத்தியாதி சத்தி பரியந்தமாகப் பிரணவ மூலம் ஆதார சத்தியர்ச்சனை செய்க.

தேவனுடைய லிங்க பீடத்தின் அடியிலே 'ஓம் ஹாம் யோக பீடாய நம' பிரம சிலைக்கு கீழே 'ஓம் ஹாம் ஆதார சத்தியே நம' பிரம சிலைக்கு மேலே 'ஓம் ஹாம் அநந்தாய நம' அதன்மேல் சிங்காசனம் அக்கினி கோணம் முதலாக ஈசானம் ஈறாக ஓம் தந்மாய நம, ஓம் ஞானாய நம, ஓம் வைராக்கியாய

நம, ஓம் ஐஸ்வர்யாய நம வென்று தர்மஞான வைராக்கியம் ஐஸ்வர்யங் கால்களாகவும் அதன் மேற்கிழக்கு முதலாக வலமாக 'ஓம் அதர்மாய நம, ஓம் அஞ்ஞானாய நம, ஓம் அவைராக்கியாய நம, ஓம் அனைஸ்வரியாய நம, வென்று அதர்மம் அஞ்ஞானம் அவைராக்கியம் அனைஸ்வரியம் சட்டங்களாகவும் அதன் மேல் நிருதி கோணத்தில் அசுத்த மாயையைச் சிவந்த நிறமாய்க் கருதி 'ஓம் ஹாம் அதச்சதனாய நம' என்று ஈசான மூலையிலே சுத்த மாயையை வெள்ளை நிறமாய்க் கருதி " ஓம் ஹாம் ஊர்த்துவச் சதனாய நம" வென்று மேற்பலகையாகவும் ஆதார சத்தியின் மேலே " ஓம் கந்தாய நம, ஓம் பீசாய நம, ஓம் அங்குராய நம, ஓம் நாளாய நம, ஓம் கண்ட கேப்பியோ நம, ஓம் தனேப்பியோ நம, ஓம் கேசரேப்பியோ நம, ஓம் கர்ணிகாய நம, ஓம் பீசேப்பியோ நம, ஓம் சூக்குமாய நம, ஓம் சிவோத்துமாய நம, ஓம் ஏகருத்திராய நம, ஓம் திரிமூர்த்தனே நம, ஓம் ஸ்ரீகண்டினே நம, ஓம் சிகண்டாய நம, ஓம் வாமாய நம, ஓம் சேட்டாய நம, ஓம் ரௌத்திரியே நம, ஓம் காளியே நம, ஓம் கலவிகர்னியே நம, ஓம் பெலவிகர்னியே நம, ஓம் பெலப்பிரமதன்னியே நம, ஓம் சர்வ பூதமன்னியே நம, ஓம் மனோன்மணியே நம" வென்று அட்ட வித்தியேசுரர் தாமரையிதழாகவும் இந்திர திசை முதலாக ஈசான திசையீறாக எட்டிதழினும் அநந்தன் முதலாக ஸ்ரீகண்டியீறாகப் பூசித்து அறுபத்து நாலு கலைகளும் கேசரமாகவும் இச்சா ஞானக் கிரியை கன்னிகையாகவும் ஐம்பத்தோரக்ஷரங்களும் பீஜமாகவும் பூசித்துக் கொள்க.

இவையெல்லாம் உடையதாயிருக்கிற பத்மத்தை 'ஓம் ஹாம் பத்மாசனாய நம' என்று பூசித்துக் கிழக்கு முதலாக எட்டுத் திக்கிலும் எட்டிதழிலும் அட்ட வித்தியேசுரரை அதிட்டித்துக் கொண்டிருக்கிற வாமாயி முதலான எட்டுச் சத்திகளையும் பூசித்துக் கன்னிகை ஈசானத்திலும் மனோன் மணியைப் பூசித்து இதழ் நுனி வட்டத்திலே " ஓம் சூரிய மண்டலாய நம, ஓம் சூரிய மண்டலாதிபதே பிர்மனே நம", என்றும் கேசர நுனி வட்டத்திலே "ஓம் சோம மண்டலாய நம,

ஓம் சோம மண்டலாதிபதே விஷ்ணுவே நம" என்றும், கன்னிகை நுனி வட்டத்திலே "ஓம் அக்கினி மண்டலாய நம, ஓம் அக்கினி மண்டலாதிபதே ருத்திராய நம" என்றும், கன்னிகை நடுவே "ஓம் சத்தி மண்டலாய நம, ஓம் சத்தி மண்டலாதிபதே மகேஸ்வராய நம" என்றிந்தப்படி அந்தந்தத் தானங்களிலர்ச்சித்து ஆசன மூர்த்தி மூலத்தால் பூசிக்க.

அதன் மேலே சிவாசனத்தைச் சுத்த மாயையாகவும் அது வியாபகமாயிருக்கிறதாகவும் தியானித்து 'ஓம் ஹாம் சிவாசனாய நம' வென்று சாத்திச் சிவமூர்த்தியைத் தேசோ ரூபமாய்த் தெண்ட வடிவாய்த் தத்துவ ரூபமாய் பரவிந்து வரைக்கும் வியாபகமாயிருக்கின்றதாகத் தியானித்துப் புருவ மத்தியினின்றும் புஷ்பாஞ்சலியால் கையைக் கொண்டு போய்க் கையை விரித்து மூடி 'ஓம் ஹாம் சிவமூர்த்தியே நம' வென்று லிங்க மூர்த்தியிலே சார்த்தித் திருமுடி முதலாகச் சீர்பாதம் ஈறாக ஈசானாதியான பஞ்சப் பிரமத்தை உச்சரித்து அங்குட்ட முதல் கனிட்டை ஈறாக அந்தந்தத் தானங்களிலே நியாசிப்பது தெண்ட பங்கியாகும். ஈசானம் முதலாகச் சத்தியோ சாதம் ஈறாக ஐந்துதிருமுடிகளிலும் நியாசிப்பது முண்ட பங்கியாம்.

இனி வித்தியாதேகம் பூசிக்கும்படி ; தேசோரூபமாய்த் தெண்டாகாரமாய் ஞான வடிவினராய்ச் சதாசிவமூர்த்தியைத் தியானித்து 'ஆம்' என்னும் பிராசாத மந்திரத்தை உச்சரித்து கை நிரம்பப் புஷ்பமெடுத்து உச்சியில் கொண்டுபோய் இறக்கி அவ்வுச்சியினின்றும் புருவ மத்தியில் கொண்டு வந்து கையை விரித்துச் சதாசிவமூர்த்தி மின்னிறமாய்ப் புஷ்பாஞ்சலிக் குள்ளே வந்ததாகப் பாவித்து மூடி 'ஓம் ஹாம் ஹௌம் வித்தியாதேகாய நம' வென்று லிங்கத்தினுடைய திருமேனி யிலே சாத்தி 'ஓம் ஹௌம் நேத்திரேப்பியோ நம' வென்று பஞ்ச முகங்களிலும் நேத்திரம் கொடுத்து நேத்திரம் பாவித்துப் பின்பு ஆவாகனம் செய்க.

சடங்கத்தை உச்சரித்துக் கைகளில் புஷ்பம் நிறைத்து அஞ்சலி செய்து கொண்டு மேதாதி கலையோடு கூடி யாதித்த

பிரபை போன்ற மூல மந்திரத்தை 'ஓம் நமசிவாய நம' என்று பூரகத்தினாலே பிரமாதி காரணேஸ்வரனார் முறையே கடந்து மனதினாலே துவாத சாந்தம் அளவாக உச்சரித்துப் பாச சாலத்தைக் கடந்து நின்மலராய் ஞான வடிவினராய் வியாபகராய்ச் சகல கர்த்தராய் இருக்கிற பரமசிவனைச் சிருட்டிக்கிரமமாகத் துவாத சாந்தத்தினின்றும் அநந்தங்கோடி சூரியப் பிரகாசமாய் 'விந்து தானமளவாகக் கொண்டு வந்து அதினின்றும் அஞ்சலிக்குள்ளே அநேக கோடி சந்திரப் பிரபை போல எழுந்தருளினதாகப் பாவித்து இரேசகத்துடனே பிங்கலை வழியாக வந்ததாய்ப் பாவித்து இருதைய மந்திரத்தினாலே' ' இருதையாய நம' என்று மூடிக் கையைக் கொண்டு வந்து 'ஓம் ஆம் சிவாய நம' என்று சாத்தி இலிங்க மூர்த்தத்திலே 'ஓம் இருதையாய நம' என்று ஆவாகன முத்திரையால் ஆவாகனமும் தாபன முத்திரையால் இருதைய கமலத்திலே தாபனமும் சந்நிதான முத்திரையினால் சந்நிதானமும் செய்து நிட்டூர முத்திரையினாலே சந்நிரோதைய மும் பண்ணிச் 'சுவாமி, சுவாகதமோ' வென்று விண்ணப்பம் செய்யத்தேவனும் 'சிறு பிள்ளாய், வந்தோம், வந்தோம்' என்றருளிச் செய்கிறதாகப் பாவித்துச் 'சுவாமி, சர்வ ஜனத்துக்கும் நாதரே! தேவரீர் பூசை முடிவளவும் நிறைந்த சந்தோஷத்தோடும் இந்த லிங்கத்தினிடத்தே சாநித்தியமாக எழுந்தருளியிருந்து இரட்சிக்க வேண்டும்' என்றிரந்து வேண்டிக் கொண்டு சொரூபதியானம் பண்ணுக.

எவ்வாறென்னில், மந்திர சிங்காசனத்தில் பத்மா சனத்தில் சுத்த ஸ்படிக நிறமாய் முப்பத்திரண்டிலக்ஷணமும் ஐந்து முகமும் முகங்கள் தோறும் முக்கண்ணும் உச்சியில் ஈசானமுகம் படிக நிறமும் இளமை வயதும் ஈசான திசை நோக்கும் தற்புருஷ முகம் கோங்கமலர் நிறமும் தருணவயதும் கீழ்த்திசை நோக்கும் அகோர முகம் கருமை நிறமும் வீரப்பல்லும் விருத்த வயதும் தென்றிசை நோக்கும் வாமதேவ முகம் சிவப்பு நிறமும் ஸ்திரி முகமும் வடதிசை நோக்கும் சத்தியோ சாதமுகம் பால் போலும் வெண்ணிறமும் மேற்றிசை

நோக்கும் உள்ளனவாகவும் சடாமகுடமும் அர்த்த சந்திரனும், கொன்றை மாலையும் மூவைந்து திருநயனங் களுடையதாகவும் பத்துத் திருக்கரங்களும் அந்தக் கரங்களில் வலக்கரமைந்தில் சத்திய அபயம் சூலம் கட்டங்கம் தமருகமும், இடக்கரமைந்தில் வரதம் மாதுளங்கனி சர்ப்பம் செபமாலை நீலோற்பலமும் பதினாறு வயதும் உடையதாகவுமிருக்கின்ற திருவுருவையிப்படி மனத்தினாலே நினைந்து வேண்டிக் கொண்டு 'ஓம் சிவாய சுவாகா' வென்று மூலத்தால் அர்க்கியம் கொடுத்துக் காளகன்னி முத்திரை யிலிங்க முத்திரை ஐமுக முத்திரை நமஸ்கார முத்திரையாகிய இந்நான்கையும் 'ஓம் இருதையாய நம' வெனக் கொடுத்து இருதையம் முதல் அத்திர மீறாக அந்தந்தத் தானங்களிலே நியாசிப்பதாகிய இருதையாதி யங்கம் செய்து 'ஓம் சிவாய வௌஷடு' வென்று அர்க்கியம் வௌஷடாந்த மூலத்தால் கொடுத்துத் தாளத்திரையம் திக்கு பந்தனம் அவகுண்டனம் தேனு முத்திரையும் கொடுத்து மகா முத்திரையும் 'ஓம் சிவாய வௌஷட்' என்று கொடுத்துப் பின் பரமீகரணம் செய்க.

சத்தியே எங்கும் நிறைந்திருக்கின்றதாக 'ஓம் சிவாய வௌஷடு' வென்று அங்குட்ட விரல்களிரண்டையும் பின்னலாக மாட்டிக் கொண்டு இரண்டு கையையும் சேர்த்து விரித்துச் சுற்றிக் காட்டுகிறதே பரமீகரணமாம், பாத்தியம் ஆசமனம் ஆர்க்கியம் என்னுமிம் மூன்றையும் வலமிடமாகப் பாத்திரயத்தைப் பாதங்களிலே 'ஓம் சிவாய நம' வென நமோந்த மூலமாக ஒவ்வொரு முறையாக இரண்டு தரமும் ஆசமனத்தை ஐந்து திருமுகங்களிலும் 'ஓம் சிவாய சுதா' வெனச் சுதாந்த மூலமாக ஒவ்வொரு முறையாக ஐந்து தரமும் அர்க்கியத்தை அதாவது விசேஷத்தை ஐந்து திருமுடிகளிலும் 'ஓம் சிவாய சுவாகா' வெனச் சுவாகாந்த மூலமாக ஒவ்வொரு முறையாக ஐந்து தரமும் பாதம் முகம் முடியிந்த மூன்றிடத்திலும் பன்னிரண்டு முறையாகும்படி கொடுத்து வௌஷடாந்த மூலத்தினாலே அல்லது 'சத்தியோ வௌஷட்' என்னும் மந்திரத்தினாலே கந்த புஷ்பம் அறுகு அட்சதையால்

அர்ச்சிக்குச் சாத்தி 'ஓம் சிவாய சுவாகா' வென்று சுவாகாந்த மூலத்தினாலே மணியொலித்துத் தூபதீபம். பணிமாறுப் பண்ணணி முன்பு போல 'ஓம் சிவாய சுவாகா' வென்று ஆசமன அர்க்கியம் கொடுத்து நின்மாலியங்களை மாற்றி அஷ்ட புஷ்பம் சாத்துக.

பாதத்தில் நீலோற்பல மலரை 'ஓம் சிவாசனாய நம' வென்றும் திருமுகத்தில் செந்தாமரை மலரை 'ஓம் சிவமூர்த்தியே நம' வென்றும் திருமுடியில் வெள்ளெருக்க மலரை 'ஓம் ஆம் சிவாய நம' வென்றும் கண்டத்தில் வில்வத்தை 'ஓம் இருதையாய நம' வென்றும் மார்பில் நந்தியாவர்த்த மலரை 'ஓம் சிரசே நம' வென்றும் நாபியில் பாதிரி மலரை 'ஓம் சிகாய நம' வென்றும் குய்யத்தில் அலரி மலரை 'ஓம் கவசாய நம' வென்றும் முழந்தாளில் சண்பக மலரை 'ஓம் அத்திராய நம' வென்றும் இந்தப்படி அஷ்ட புஷ்பம் சாத்துக. இனிச் சில பிரதிகளில் 'திருமுடியில் வெள்ளெருக்கம் பூ ஓம் சிவாய நம, திருமுகத்தில் செந்தாமரை மலர்ஓம் சிவமூர்த்தனே நம, கண்டத்தில் வில்வம் ஓம் இருதையாய நம, மார்பில் நந்தியா வர்த்த மலர் ஓம் சிவமூர்த்தனே நம, கண்டத்தில் வில்வம் ஓம் இருதையாய நம, மார்பில் நந்தியா வர்த்த மலர் ஓம் சிரசே நம, நாபியில் பாதிரி மலர் ஓம் சிகாய நம, குய்யத்தில் அலரி மலர் ஓம் கவசாய நம, முழந்தாளில் சண்பக மலர் ஓம் அத்திராய நம பாதத்தில் நீலோற்பல மலர் ஓம் சிவாய நம' என்றிருக்கின்றது.

முற்காட்டிய முறை பாதம் திருமுகம் திருமுடிகளில் கீழிருந்து மேலேற அர்ச்சித்துப் பின்பு கண்டம் மார்பு நாபி குய்யம் முழந்தாள்களில் மேலிருந்து கீழ்வர அர்ச்சிப்பதாம். பின் காட்டிய முறை திருமுடியிலிருந்து பாதம் வரை மேலிருந்தே கீழ்வரை ஒரே முறையில் அர்ச்சிப்பதாம். இவ்விரண்டில் ஏற்பதொன்றை செய்க.

இந்தப்படி அஷ்ட புஷ்பம் சாத்திப் பின்பு சுத்தோதகத்தினாலே 'மூன்று கலசம்' ஓம் சிவாய சுவாகா வென்று அபிஷேகம் செய்தாடியருளப் பண்ணித்

திருவொற்றாடை சாத்தி "ஓம் சிவாய நமஹா" என்று மண்ணமைக் காப்பு சந்தனாதித் தயிலம் சாத்திக் கர்ப்பூர பொடி மாப்பொடிகளாலே மத்தித்து அர்க்கியம் கொடுத்து அலங்கொடுத்து ஆடியருளப் பண்ணிச் சுத்தோதக அபிஷேகம் செய்து பஞ்ச கவ்வியம் மாக்காப்பு மஞ்சட் காப்பு நெல்லி முள்ளிக் காப்பு பஞ்சாமிர்தம் திருமஞ்சனத் திரவியம் தேன், பால், தயிர் நறுநெய் இளவெந்நீர் சுத்தோதகம் கருப்பஞ்சாறு சர்க்கரைச் சலம் வாழைப்பழம் மாம்பழம் பலாப்பழம் நாரத்தையும் எலுமிச்சையும் கொழுவிஞ்சியும் தமரத்தையும் மாதுளையும் முதலான பல்கனிச்சாறு இளநீர் அன்னாபிஷேகம் வில்வக் குழம்பு சந்தனக் குழம்பு முதலானவை எல்லாம் போககாமி ஈசானாதி முதலாகவும் மோக்ஷகாமி சத்தியோசாத முதலாகவும் அபிஷேகம் பண்ணி இடையிடையே அஷ்ட புஷ்பம் சாத்தி ஆசமனம் அர்க்கியம் தூப தீபம் கொடுத்து நைவேத்தியம் செய்து மீட்டும் தூபதீபம் பாத்தியா சமனம் அர்க்கியம் கொடுத்துச் சுத்தோதக அபிஷேகம் பண்ணிச் சங்காபிஷேகம் செய்து பதாகை முத்திரை மூல மந்திரத்தினாலே ஐந்து முறையாடியருளப் பண்ணிப் பின்பு சகஸ்திர தாரை காண்டாமிருகக் கொம்பு கொண்டு அபிஷேகித்துப் பதமந்திரம் எண்பத்தொன்று இருபத்தைந்து பதினாறு. இவற்றுள் சுருக்கம் பதினாறாம்.

இம்முறைவகையில் இயன்ற ஓர்வகைப் பத மந்திரங்களால் அபிஷேகம் செய்து ஆசமன அர்க்கியம் கொடுத்துச் சந்தனக் குழம்பாபிஷேகம் பண்ணி அஷ்ட புஷ்பம் சாத்தித் தூப தீபம் கொடுத்து அர்க்கியம் கொடுத்து இரண்டு தளிகை அன்னம் நிவேதனம் பண்ணி மீட்டும் அர்க்கியம் கொடுத்துத் தூப தீபம் கர்ப்பூரம் பண்ணி மூலத்தாலும் சங்கிதை பதினொன்றாலும் அபிஷேகம் செய்து விசேஷார்க்கியத்தால் அபிஷேகம் பண்ணுக.

இந்தப்படி அபிஷேகித்த பின்பு திருவொற்றாடை மூலத்தால் சாத்தி 'ஓம் சிவாய நம' என்றோர் புஷ்பம் சாத்தி அலங்காரம் பண்ணும் விதம்:- பொன்னரைஞாண், பட்டக்

கௌபீனம், தங்கப் பதினம் [illegible]. விபூதி, சந்தனம், சவ்வாது, [illegible] கஸ்தூரி, தங்கப் பூணூல், கோரோசனை, பச்சைக் கர்ப்பூரம், [illegible] பரிமள சுகந்தங்கள் சாத்தி இரத்தினப் பூஷணம், இரத்தினக் கிரீடம், இரத்தின குண்டலம், கங்கணங்கள், [illegible], [illegible]வுக்களி, காசுதாலி, கண்டமாலை, ஆரஞ் சவடி, ஏகாவளி, [illegible]ருக்கிலை மாலை, வில்வ மாலை, தண்டை, சிலம்பு, சதங்கை முதலான சகல திருவாபரணங்களும் சாத்தி இண்டை தொடர் மாலை முதலானவையும் சாத்தியலங்காரம் செய்து பின்பு தத்துவத் திரையம் செய்க.

'ஓம் ஆம் ஆத்மதத்துவாதிபதே சிவாய நம, ஓம் ஆம் வித்தியா தத்துவாதிபதே சிவாய நம, ஓம் ஆம் சிவதத்துவாதிபதே சிவாய நம' வென்றிந்தப்படி புஷ்பாஞ்சலித் திரையமாகச் சாத்துவதே தத்துவத்திரையம் செய்தலாகும். பின் பாத்தியாசமன வர்க்கியம் முன்போலக் கொடுத்துத் தூப தீபம் பணிமாறி மநோரத முத்திரை கொடுத்துப் பின்பு இலயாங்கம் இஷ்ட காமியம் போகாங்கம் பூசிக்க.

இலயாங்கம் பூசிப்பதாவது பஞ்சப் பிரம சடங்கங்களாகிய பதினொரு மந்திரங்களினாலே அந்தத் தானங்களிலே அர்ச்சித்துப் பஞ்ச முகங்களில் பஞ்ச முத்திரை கொடுக்க. ஈசான முகத்தில் தேனு முத்திரையும் தற்புருஷ முகத்தில் பத்ம முத்திரையும் அகோர முகத்தில் திரிசூல முத்திரையும் வாமதேவ முகத்தில் மகா முத்திரையும் சத்தியோசாத முகத்தில் சிருக்கு முத்திரையுமாக இந்தப்படி முத்திரை கொடுத்து இரண்டாமாபரணம் பூசிக்கும்படி ; கிழக்கு முதல் எட்டுத் திக்கிலும் 'ஓம் அனந்தாய நம, ஓம் சூக்ஷுமாய நம, ஓம் சிவோத்துமாய நம, ஓம் ஏகநேத்திராய நம, ஓம் ஏக ருத்திராய நம, ஓம் திரிமூர்த்தயே நம, ஓம் ஸ்ரீகண்டனே நம, ஓம் சிகண்டாய நம' வென்று அர்ச்சித்து மூன்றா மாபரணம் பூசிக்கும் படி ; கண்டத்தில் கிழக்கு முதல் 'ஓம் நந்தினே நம , ஓம் மகா காளாய நம, ஓம் பிருங்கயே நம, ஓம் கணபதயே நம, ஓம் இடபாய நம, ஓம் கந்தாய நம, ஓம் தேவியே நம, ஓம் சண்டாய நம' வென்றிந்தப் படி அர்ச்சித்து

நான்காமாபரணம் பூசிக்கும்படி; கீழ்ப்பாகனி வட்டத்திக் கு க்கு முதல் எட்டுத் திக்கிலும் அஷ்ட பாலகரைப் பூசிக்கவும்.

ஈசானத்தில் 'ஓம் பிரமனே நம, நிருதியில் ஓம் விஷ்ணுவே நம' என்று அர்ச்சித்து ஐந்தாமாபரணம் பூசிக்கும்படி. 'ஓம் வச்சிராய நம, ஓம் சத்தியே நம, ஓம் தெண்டாய நம ஓம் கட்காய நம, ஓம் பாசாய நம, ஓம் அங்குசாய நம, ஓம் சக்ராய நம, ஓம் கெதாய நம, ஓம் சூலாய நம, ஓம் துசாய நம', என்று அர்ச்சித்துப் பூசித்து அர்க்கியம் கொடுத்து இட்ட காமியங்களை விண்ணப்பம் செய்து கொண்டு போகாங்கப் பூசிக்கும்படி, சிவனுடைய ஈசான முதல் ஐந்து திருமுடிகளினும் "ஓம் ஹாம் ஈசான மூர்த்தனே நம, ஓம் ஹாம் தற்புருஷவத்திராய நம, ஓம் ஹாம் அகோர இருதையாய நம, ஓம் ஹாம் வாமதேவ குய்யாய நம, ஓம் ஹாம் சத்தியோ சாத மூர்த்தியே நம", வென்று அந்தந்தத் திருமுடிகளில் அர்ச்சித்து பின் ஈசானத்தில், 'ஓம் ஹாம் நேத்திரேப்பியோ நம' வென்று நேத்திரத்தையும் அக்கினி திசையில் 'ஓம் ஹாம் இருதையாய நம', வென்று இருதையத்தையும் ஈசான திசையில் 'ஓம் ஹாம் சிரசே நம' வென்று சிரசையும், நிருதியில் 'ஓம்ஹாம் சிகாய நம' வென்று சிகையையும் வாயு திசையில் 'ஓம் ஹாம் கவசாய நம' வென்று சர்வாங்கங்களினும் நின்று பிரகாசம் பொருந்தியிருக்கின்ற கவசத்தையும் அர்ச்சித்துக் கிழக்கு முதற் நாற்றிசைகளினும் 'ஓம் ஹாம் அத்திராய நம' வென்று வாம பாகமாக அத்திரத்தையுமர்ச்சித்து அர்க்கியம் கொடுத்து ஈசானாதியைந்து திருமுடிகளுக்கும் தேனு முத்திரை கொடுத்து அங்கங்களுக் கெல்லாம் நமஸ்கார முத்திரை கொடுத்து ஈசானாதியான பிரமங்களும் இருதையாதியான அங்கங்களும் சிவனுடனே கூடினதாகப் பாவித்து ஏகோபாவகராகத் தியானித்தலாகிய ஏகத்துவம் செய்து புஷ்பாஞ்சலித் திரையமும் செய்து இப்படிச் செய்வதரிதானால் இவையெல்லாம் செய்ததாகப் பாவித்துத் தோத்திரம் செய்து வேண்டிக் கொண்டு மனோன்மணிபூசை செய்க.

சுவாமிக்கு வடமேற்கே தென்முகமாகப் பத்மாசன மிட்டு 'ஓம் மனோன்மணியாசனாய நம, ஓம் மனோன்மணி மூர்த்தயை நம, ஓம் மனோன்மணியை நம' வென்றாசன மூர்த்தி மூலத்தால் அர்ச்சித்தெழுந்தருளப் பண்ணி அர்க்கியம் கொடுத்து அபிஷேகம் செய்து அர்க்கியம் புரோட்சித்துக் கந்த புஷ்பம் அறுகு அட்சதை சாத்திப் பூசித்துத் தூபதீபம் கொடுத்துப் பின்பு மனோன்மணித்தாய் சுவாமிக்குத் திருவமுது படைத்து நிவேதனம் பண்ணுகிறதாகப் பாவித்துச் சுவாமி நிவேதனம் கொண்டருளும்படி பஞ்சவர்க்க அன்னமான திருவமுது பச்சடி முதலிய கறி, நெய், தயிர், பால், பழம், சர்க்கரை, பொரியல், பானகம், இளநீர், பாயசம், வடை முதலிய பலகாரவர்க்கம் சுத்தோதகம், வெற்றிலைப் பாக்கு, கர்ப்பூரம், சாதிக்காய் முதலிய முகவாசம் ஆகிய இவைகளை நிரீக்ஷணாதி சுத்தி செய்து 'ஜிம்சகஹ' என்கிற மிருத்திஞ்சய மந்திரத்தால் அபிமந்திரித்துத் திக்கு பந்தனம் அவகுண்டனம் பண்ணித் தேனு முத்திரை மகா முத்திரை கொடுத்துச் சுவாகாந்த மூலத்தையுச்சரித்து மிருக முத்திரையினாலே நைவேத்தியத்தை ஈசானாதி பிரமாங்களுக்கெல்லாம் தனித்தனியாகப் பாத்திரங்களில் வைத்து அப்படிப் பாத்திரமில்லாதிருந்தால் ஏக பாத்திரத்திலே வைத்து அந்தந்த மந்திரங்களாலாவது 'ஓம் ஈசானாதிப் பியோ சுவாகா' என்றாவது அல்லது 'ஓம் சர்வேப்பியோ பிரமாங்கேப் பியோ சுவாகா' என்றாவது நிவேதித்துப் பின் சுத்தோதகத்தை 'ஓம் அத்திராய நம' என்ற அத்திரத்தால் பானீயம் வளைத்து 'ஓம் சிவாய சுவாகா' என்று நிவேதித்து ஆசமன அர்க்கியம் கொடுத்து ஒரு பத்திரத்தினாலே * கரோத்துவதரம் செய்து

---

" கரோதர வர்த்தனம்", " கராதர வர்த்தனம்", " கரோவதர வர்த்தனம்", " கரோத்து வர்த்தனம்" என்று பலவிதமாக ஏட்டுப் பிரதிகளில் காணப்படுகின்றன. "கரோத்துவதரம்" என்று இருப்பதே பொருத்தம் எனத் தோன்றுசிறது. கர ஒத்து அதரம் என்பவை கரோத்துவதரம் என்றாகிக் கரத்தால் ஒத்தப்படும் உதடு எனப் பொருள் பட்டு வாய்பூசுதல் என்பது போதரும்.

நாகத்தில் பஸ்மனித் தாம்பூல முதலான முதலானவற்றை நிவேதித்துக் கொடுக்க.

பின்பு மணிமண்டபமணி முதலான தேவதைகளுக்கெல்லாம் அவரவர் நாமத்தாலே சுவாகாந்தமாகவே நிவேதனம் கொடுத்து அவரவர்க்கு அர்க்கியமும் கொடுத்துவிட்டுப் பின்பு சுவாமிக்குப் பாதத்தில் பாத்தியம் நமாந்தமாகவும் கரத்தில் ஆசமனம் சுதாந்தமாகவும் திருமுகத்தில் விசேஷம் சுவாகாந்தமாகவும் மூலத்தால் இந்தப்படி பாத்தியாசமன அர்க்கியம் கொடுத்து 'ஓம் சிவாய நம' என்று பூசித்துப் புஷ்பார்ச்சனை செய்து கைம்மணியில் ஒரு புஷ்பத்தை அத்திர மந்திரத்தால் சாத்தி அம்மணியைக் கையிலே எடுத்துச் சொலிப்பித்துத் தூப தீபங்களுக்கு பிரோக்ஷணம் திக்கு பந்தனம் அவகுண்டனம் பண்ணி அர்க்கியமும் கொடுத்து சுவாகாந்த மூலத்தால் தூபத்தை மகாதேவருடைய நாசிக்கேற்கவும் தீபத்தை நேத்திரத்திற்கு ஏற்கவும் பணிமாறப் பண்ணி ஆசமன அர்க்கியம் கொடுத்து 'ஓம் அத்திராய நம', என்று அத்திரத்தால் அறுகு அட்சதையோடு கூடின புஷ்பங்களை எடுத்து 'ஓம் ஹாம் சர்வ பூதுவாதிபதே சிவாய நம' என்று பௌத்திரம் சாத்திப் பின்பு வெண் கடுகு, பருத்திக் கொட்டை, உப்பு முதலான திரவியங்களினாலே கூட்டியிருக்கிற திருவாலத்தியை எடுத்துக் கவச மந்திரத்தால் கீழுமேலுமாகச் சுற்றிப் பணிமாறிக் கீழே வைத்து 'ஓம் அத்திராய நம' என அத்திர மந்திரத்தினாலே சொலித்து ஆசமன வர்க்கியம் கொடுத்துத் திருநீறு, கண்ணாடி, சுருட்டி, குடை சாமரம் ஆலவட்டம், விசிறி இவைகளை பிரோக்ஷணாதி சுத்தி செய்து, 'ஓம் சிவாய சுவாகா' என்று அல்லது 'ஓம் சிவாய நம' என்று பணிமாறித் தேனு முத்திரை காட்டிப் பாத்தியாசமன அர்க்கியம் கொடுத்துப் பின்பு வேதங்களினாலே தோத்திரம் பண்ணப்பட்டுச் சந்துஷ்டனா யிருக்கிற பரமசிவனைத் தியானம் பண்ணி மூலமந்திரத்தினாலே 'ஓம் சிவாய நம' என்று புஷ்பாஞ்சலி கொடுத்து மகா முத்திரையும் பஞ்சமுக முத்திரை ஆகிய ஐமுக முத்திரையும் கொடுத்துப் பின் செபித்துச் சாத்துக.

செப மாலையை நிரீக்ஷணாதி சுத்தி செய்து தேனு முத்திரை ஜபமுக முத்திரை கொடுத்து இருதையத்தினா 'இருதையாய நம' வென்று அபிமந்திரித்து அம்மந்திரத் தினாலேயே பூசித்து இடக்கையிலே புஷ்பங்களை வைத்துக் கொண்டு வலக்கைச் செப மாலையினாலே அன்புடனே, 'ஓம் சிவாய நம' என்று மூலம் நூற்றெட்டுச் செபித்துக் கையிலிருக் கின்ற அந்த புஷ்பங்களை 'இருதையாய நம, கவசாய நம, அத்திராய நம' வென்ற அத்திர கவச விருதையங்களினாலே அபிமந்திரித்துச் சம்புடம் பண்ணி அத்திர கவசங்களினாலே திக்கு பந்தனம் அவகுண்டனம் செய்து புஷ்பங்களை வலக்கையிலே வாங்கி அர்க்கியம் கோதி அவ்வர்க்கியச் சலத்துடனே கூட உற்பவ முத்திரையினாலே வல முழந்தாளை ஊன்றி படியிட்டுக் கொண்டு கன்மத்தையும் சிவபூசா செப பலத்தையும் ஆத்மாவையும் தேவனுடைய வலத் திருக்கரத்திலே கொடுத்துச் செபித்த புஷ்பத்தை மூலத்தினால் 'ஓம் சிவாய நம' என்று சிவனுக்குச் சாத்திப் பின்பு போகாங்கருக்கும் சிவனுக்குச் செபித்த செபத்தில் பத்திலொன்று செபித்துச் சாத்திச் சுவாமிக்கு அக்கினி கோணத்திலே சடுத்தாசனமாவது சிவாசமானது கற்பித்து அதன் மேலே - சிவகுருபீடத்தைத் தன்னுடைய குருமூர்த்தியாகத் தியானித்துச் சிவமூர்த்தியால் புஷ்பம் சாத்தி அதன் மேல் மூலத்தால் சிவனையாவாகித்துச் சாமானிய வர்க்கியத்தால் பாத்தியாசமன வர்க்கியம் கொடுத்துக் கந்த புஷ்பம் அறுகு அட்சதை தூபதீபம் முதலாவுள்ள சர்வோபசாரங்களினாலும் சிவனைப் போலவே பூசித்துப் பின்பு அதற்கு மேலைப் பாகத்தில் யோக பீடத்தையும் அதற்குக் கீழைப் பாகத்தில் சிவாகமமாகப் பாவித்து வித்தியா பீடத்தையும் ஆசன மூர்த்தி மூலத்தால் அர்ச்சித்துப் பின்பு மகாதேவரைப் புஷ்பாஞ்சலித் திரையங்களினாலே மூலத்தால் அர்ச்சித்துத்தோத்திரம் செய்து வேண்டிக் கொண்டு பிரதக்ஷணம், நமஸ்காரம், அட்டாங்க பஞ்சாங்கமாக ஐந்து முறை பண்ணியெழுந்திருந்து பின்பு இரண்டாம் கால பூசையும் மூன்றாம் கால பூசையும் செய்க.

அவ்வாறு செய்ய இயலாவிட்டால் 'ஓம் சிவாசனாய நம, ஓம் சிவமூர்த்தியே நம, ஓம் சிவாய நம' என்று ஆசன மூர்த்தி மூலத்தால் சிவனை அர்ச்சித்துப் போகாங்கரையும் அதாவது ஈசானாதி ஐந்து திருமுடிகளையும் இருதையாதி ஆறங்கங்களையும் அவரவர் மந்திரங்களால் அதாவது சங்கிதையான பதினொரு மந்திரங்களால் அர்ச்சித்து இரண்டாம் மூன்றாம் கால பூசை செய்து முடித்ததாகப் பாவித்து விடுக.

அக்கினி காரியத்துக்கு யோக்கியமில்லாதவன் அஷ்ட புஷ்பத்தாலாதல் சங்கிதை பதினொன்றாலாதல் அர்ச்சித்து அர்க்கியம் கொடுக்க. அக்கினி காரியத்தக்கு யோக்கிய முள்ளவன் உபகரணமில்லாதவிடத்தும் அசத்தனான விடத்தும் ஓமம் செய்யும் அளவுக்குப் பத்தின் மடங்காய் மூல மந்திரங்களினாலும் பிரமாங்கங்களினாலும் செபித்துச் சாத்திப் பஞ்சமுக முத்திரை கொடுத்து விடுக.

பின்பு ஐந்து திருமுடிகளிலும் சத்தியோசாதம் முதல் ஈசானம் ஈறாக மூலத்தால் மாறியர்ச்சித்து அதே முறையாகப் பராமுகார்க்கியம் சுவாகாந்தமாக மாறிக் கொடுத்துப் போகாங்கருக்கும் அத்திரம் முதல் ஈசானம் ஈறாக அர்க்கியம் மாறிக் கொடுத்து 'ஓம் அஸ்திராய நம'வென அஸ்திர மந்திரத்தை உச்சரித்து நாராச முத்திரையினாலே புஷ்பத்தால் தெறித்து எழுப்பிப் போகாங்கரையும் அவரவர் மந்திரத்தையும் உச்சரித்துத் திவ்விய முத்திரையினாலே புஷ்பத்தால் தெறித் தெழுப்பி அப்போகாங்கரை அத்திவ்விய முத்திரையினாலேயே சிவ மூர்த்தியின் மேல் 'ஓம் சிவாய நம' என்று கூட்டிச் சாத்தலாகிய ஏகத்துவம் செய்க.

பின்பு மூலத்தாலர்ச்சித்து மகா முத்திரை கொடுத்து அர்க்கியமும் கொடுத்துக்கும்பிட்டுக் கொண்டு, "சுவாமி! அஞ்ஞான வடிவாயிருக்கிற அடியேன் பூசையில் அறியாது செய்த அபசாரங்களையெல்லாம் திருவுளத்தில் பொறுத் தருளல் வேண்டும்" என்று விண்ணப்பம் செய்து வேண்டிக்

கொண்டு சுவாமிக்குத் திக்கு பந்தனம், அவகுண்டனம் [illegible] தேனு முத்திரை, மகா முத்திரை கொடுத்துப் பராமுகார்க்கியம் செய்து மூலத்தால் பராமுகார்க்கியம் கொடுத்து "இருதையா[illegible] நமசிவாய நம" என்று இருதையத்திலே சுவாமி[illegible] யெழுந்தருளப் பண்ணி யொடுக்கிக் கொள்க. பின் சிவ[illegible] முதல் சிவசூரியர் வரையும் அவரவர் திருநாம மந்திரங்க[illegible] அர்ச்சித்துச் சாமானிய அர்க்கியத்தால் பராமுகார்க்கியம் கொடுத்து உத்தியாபனம் பண்ணி 'இருதையாய நம' வென்றொடுக்கிக் கொள்க. பின் சண்டேஸ்வர பூசை செய்க

சுவாமிக்கு ஈசானத் திசையில் சுசியான தானத்திலே அர்த்த சந்திராகிருதியாக மண்டலமிட்டுச் சடுத்தாசனம் பூசித்து 'ஓம் ஹாம் சண்டாசனாய ஹூம் பண்ணமஹ' என்று சண்டாசனம் அர்ச்சித்து ருத்திராங்கிதன்னில் செனித்தவராய்க் கரிய நிறமும் அக்கினி சொலிப்பது போல் விளங்கா நின்ற நான்கு திருமுகமும் முகம்தோறும் முக்கண்ணும் சந்திரனைத் தரித்த சடையும் சர்ப்ப கங்கணமும் சர்ப்பத்தாலான முப்புரி நூலும் நான்கு திருக்கரங்களும் வலக்கரமிரண்டில் மழுவும் கமண்டலமும் இடக்கரமிரண்டில் செபமாலையும் சூலமும் வெண்டாமரை யாசனமும் உடையவரான சண்டேஸ்வரரைத் தியானித்து 'ஓம் ஹாம் சண்டமூர்த்தயே ஹூம் பண்ணமஹ' என்று சண்ட மூர்த்தியால் அர்ச்சித்து 'ஓம் ஹாம் சண்டநேத்ரேப்யோ ஹூம் பண்ணமஹ' என்று நேத்திரத்தை நேத்திரத்தில் கொடுத்து, 'ஓம் ஹாம் த்வநிச் சண்டேஸ்வராய ஹூம் பண்ணமஹ' என்று சண்ட மூலத்தால் ஆவாகித்து இருதையம் சிரசு, சிகை, கவசம், அத்திரம் இந்த மந்திரங்களால் இருதையாதியங்கங்களிலே "ஓம் ஹாம் சண்ட ஹ்ருதையாய ஹூம் பண்ணமஹ, ஓம் ஹாம் சண்ட சிரசே ஹூம் பண்ணமஹ, ஓம் ஹாம் சண்ட சிகாயை ஹூம் பண்ணமஹ, ஓம் ஹாம் சண்டகவசாய ஹூம் பண்ணமஹ, ஓம் ஹாம் சண்ட ஹஸ்த்ராய ஹூம் பண்ணமஹ" என்று மந்திரங்களின் அந்தந் தோறும் உம் பண்ணமஹ என்று உச்சரித்து அர்ச்சிக்க.

இப்படி செய்யக் கூடாதிருந்தால் ஆசனமந்திரமிட்டுச் சந்தனம் சாத்தி அதில் ஆசன மூர்த்தி மூலத்தால் [illegible] அர்ச்சித்து விசேஷார்க்கியம் கொடுத்து அபிஷேகம் செய்து அர்க்கியம் புரோட்சித்து மகாதேவர்க்குச் சாத்தி முன் குறித்து வைத்த நின்மாலியப் புஷ்பம், திருமேற்பூச்சு, திருப்பரிவட்டம், திருமாலை இண்டை தொடர்களினாலே அலங்கரித்து சாத்திச் சுவாமிக்கு நிவேதித்து வைத்திருக்கின்ற சிவப்பிரசாதமான திருவமுது முதலானவற்றை யெல்லாம் நிவேதித்துப் பாத்தியாசமன வர்க்கியம் கொடுத்துத் தூபதீபம் கற்பூராலத்தி யெடுத்துப் பின்பு அர்க்கியம் கொடுத்துச் செபித்துச் சாத்திக் கைகொட்டிக் கும்பிட்டுத் தோத்திரம் செய்து, "சுவாமி! சண்டேஸ்வரமூர்த்தி! அடியேன் பூசையில் அறியாமல் செய்த அபசாரங்களெல்லாவற்றையும் பொறுத்தருளிச் சிவபூசா பலன் முழுவதையும் கட்டளையிட்டருளவேண்டும்" என்று விண்ணப்பம் செய்து வேண்டிக் கொண்டு பராமுகார்க்கியம் சண்ட மூலத்தால் கொடுத்து லயமுத்திரையால் பூரகத்தால் இதயத்தில் ஒடுக்கிக் கொள்க.

பின்பு அர்க்கியங்களையும் இருதையத்தில் ஒடுக்கி விட்டுக் கரநியாசம் அங்க நியாசம் செய்து நின்மாலியங்களை வாரி மாற்றிப் பூமி சுத்தி செய்து கால் கைகளையும் சுத்தி செய்து கொண்டு ஆசமனம் பண்ணி விபூதி தரித்துக் கொண்டு கரநியாசம் அங்க நியாசம் பண்ணிப் பூசாக்கிரமத்திலே வந்த *நூனாதிகந்தீர அகோரம் நூற்றெட்டுருவாவது இருபத் தெட்டுருவாவது செபித்துக்கூடின மட்டும் செபத்தியானம் செய்து பின்பு ஆகம பூசை பண்ணித் திருக்கோயிலுக்குப் போய்ச் சிவதரிசனம் செய்து அதன்பின் ஆசாரியாரை அர்ச்சித்துக் குருதரிசனமும் செய்து பசுவுக்கு வாயுறை கொடுத்து, ஆகார சுத்தி செய்து சாட்சி போசனத்துடன்

---

* நூனாதிகம் : - குறைதல் கூடுதல்கள்; ஏற்றத் தாழ்வுகள் என்பதாம். நூனம் அதிகம் என்பவை நூனாதிகமெனத் தீர்க்க சந்தியாயின. நூனம் - குன்றல்; அதாவது குறைதல். அதிகம் - ஏற்றம்.

போசனம் செய்க. நித்திரைக்கு முன்னும் பின்னும் யாத்திரைக்கு முன்னும் பின்னும் ஆகாரத்துக்கு முன்னும் பின்னும் தாம்பூலத்துக்கு முன்னும் சலமலாதிக்குப் பின்னும் விபூதித் தரித்துக் கொள்க. பொய், கோபம், களவு, அவா, இறுக்காறு, இன்னாச் சொல், ஸ்திரீகமனம் இவற்றையெல்லாம் விட்டிடுக.

பார்த்திப பூசாவிதி விரிவட்டவணை முற்றிற்று

உ

சிவமயம்

திருச்சிற்றம்பலம்

## சிவபூசை நிறைவில் விண்ணப்பிக்கப் பெறும் திருப்பாடல்கள்

### தேவாரம்

அரியானை அந்தணர்தம் சிந்தை யானை
அருமறையின் அகத்தானை அணுவை யார்க்கும்
தெரியாத தத்துவனைத் தேனைப் பாலைத்
திகழொளியைத் தேவர்கள்தங் கோனை மற்றைக்
கரியானை நான்முகனைக் கனலைக் காற்றைக்
கனைகடலைக் குலவரையைக் கலந்து நின்ற
பெரியானைப் பெரும்பற்றப் புலியூ ரானைப்
பேசாத நாளெல்லாம் பிறவா நாளே

### திருவாசகம்

உடையாள் உன்தன் நடுவிருக்கும்
உடையாள் நடுவுள் நீயிருத்தி
அடியேன் நடுவுள் இருவீரும்
இருப்ப தானால் அடியேன்உன்
அடியார் நடுவுள் இருக்கும் அருளைப்
புரியாய் பொன்னம் பலத்தெம்
முடியா முதலே என்கருத்து
முடியும் வண்ணம் முன்னின்றே

### திருவிசைப்பா

ஒளிவளர் விளக்கே! உலப்பிலா ஒன்றே!
உணர்வுசூழ் கடந்ததோர் உணர்வே!
தெளிவளர் பளிங்கின் திரள்மணிக் குன்றே!
சித்தத்துள் தித்திக்கும் தேனே!
அளிவளர் உள்ளத்து ஆனந்தக் கனியே!
அம்பலம் ஆடரங் காக
வெளிவளர் தெய்வக் கூத்துகந் தாயைத்
தொண்டனேன் விளம்புமா விளம்பே.

## திருப்பல்லாண்டு

மன்னுக தில்லை வளர்கநம் பத்தர்கள்
வஞ்சகர் போயகலப்
பொன்னின்செய் மண்டபத் துள்ளே புகுந்து
புவனியெல் லாம்விளங்க
அன்ன நடைமட வாள்உமை கோன்அடி
யோமுக்கு அருள்புரிந்து
பின்னைப் பிறவியறுக்க நெறிதந்த பித்தற்குப்
பல்லாண்டு கூறுதுமே.

## பெரியபுராணம்

ஐந்துபேர் அறிவும் கண்களே கொள்ள
அளப்பரும் கரணங்கள் நான்கும்
சிந்தையே ஆகக் குணம் ஒரு மூன்றும்
திருந்துசாத்து விகமே ஆக
இந்துவாழ் சடையான் ஆடும் ஆனந்த
எல்லையில் தனிப்பெருங் கூத்தின்
வந்தபேர் இன்ப வெள்ளத்துள் திளைத்து
மாறிலா மகிழ்ச்சியில் மலர்ந்தார்.

## திருக்கோவையார்

திருவளர் தாமரை, சீர்வளர் காவிகள், ஈசர்தில்லைக்
குருவளர்பூங்குமிழ், கோங்குபைங் காந்தள்கொண் டோங்கு தெய்வ
மருவளர் மாலைஓர் வல்லியின் ஒல்கி அனநடை வாய்ந்து
உருவளர் காமன்றன் வென்றிக் கொடிபோன்று ஒளிர்கின்றதே.

## திருப்புகழ்

இருவினையின் மதிம யங்கித் திரியாதே
எழுநரகில் உழலு நெஞ்சுற்று அலையாதே
பரமகுரு அருள் நினைத்திட்டு உணர்வாலே
பரவுதரி சனையை யென்றெற் கருள்வாயே
தெரிதமிழை யுதவு சங்கப் புலவோனே
சிவனருளு முருக செம்பொற் கழலோனே
கருணைநெறி புரியுமன்பர்க் கெளியோனே
கனகசபை மருவுகந்தப் பெருமாளே.

உ

சிவமயம்

ஸ்ரீ மீனாக்ஷி சொக்கலிங்கம் துணை

# முத்திரை விளக்கப் படங்கள்



1. சிகாமுத்திரை

௨. அங்கநியாச மகாமுத்திரை

3. பதாகை



4. தேனுமுத்திரை



5. அங்கநியாச நாராசம்



6 விக்கினநீக்க நாராசம்



7. விஸ்புரம்



8, ஆவாகனம்



9. ஸ்தாபனம்



10. சன்னிதானம்



11. சன்னிரோதனம்



12. பிம்பம்



13. சூரியநியாச மகாமுக்கிரை



14. பத்மம்



15. கோ விடாணம்



16 திராசினி



17. பிருகி



18. நமஸ்காரம்







௨௧. சாணம்

௨௦. மந்திரங்களை எழுப்பும் நாராசம்

19 உத்பவம்







௨௪. உஷ்ணீசம்

௨௨. ரெசன்னம்

௨௩. அதிட்டானம்







௨௬. மோகம்

௨௫. சின்முத்திரை

௨௭. திவ்யம்



30. ஆன்மவீகம்

28. ஆக்ரம் 29. கடாமுத்திரை





33. உஷ முத்திரை

31. ஆக்ர கண்டம் 32. சங்கம்







36. சங்காரம்

34. சோடிகா

35. தீட்சணம்



37. காளகர்ணி



38. லிங்கம்



39. பஞ்சமுகி



40. மனோரதம்



41. திரிசூலம்



42. மகரம் (முன்புறம்)



42. அ. (பின்புறம்)



43. சிருக்கு (முன்புறம்)



43. அ. (பின்புறம்)



44. நிரீட்சணம்



45. புரோட்சணம்



46. தாடனம்



47. அப்யுட்சணம்



48. காளக்திரயம்



1. சம்மாறம்



௨. சங்கம்



3. கோகோட்டம்



4. அதோமுகி



5. சேரக்திகம்



6. அதிதீக்கணம்



7. கோமுகம்



8. கோகர்ணம்



9. நிரோதனம்



10. கும்பம்



11. பிரசன்னம்



12. வராகம்



13. அங்குசம்



14. திருமுத்திரை



15. ஊர்த்துவ-முகி



16. சபா அல்லது சடா



17. பணை



18. துருவம்



19. கண்டி



20. செகண்டி



21. காளகர்ணி



22. தியாகம்



23. பரிகை



24. பரிகம்



25. சண்முகி



27. மகுடம்



26. தர்ப்பணம்

உ

சிவமயம்

# பூசா மூர்த்திகளின் திரு உருவப் படங்கள்



1. சூரியபூஜை

அஷ்டதள பத்மம்



௨. தண்டி
(செம்மை)



3. பிங்களர்
(செம்மை



4. கணபதி
(செம்மை)



5. குரு
(செம்மை)



6. தீப்தை முதலிய
சக்திகள்
(செம்மை)



7. சிவசூரியன்
(செம்மை)



8. சூரிய அங்க தேவர்கள்
(கருமை)



9. அஸ்திர தேவர்
(செம்மை)



10. சந்திரன் முதலிய
கிரகங்கள்.
சந்திரன் - வெள்ளை, செவ்வாய் -
புதன் - தங்கம், வியாழன் - பொன் ( )
வெள்ளி - வெள்ளை, சனி - கருமை,
ராகு - கருமை, கேது - புகை



11. சூரிய சக்திகள்
(செம்மை)



12. தேஜச்சண்டர்
(செம்மை)



13. துவார கணபதி
(கருமை)



14. சரஸ்வதி
(வெண்மை)



15. இலக்குமி
(பொன்மை)



16. நந்தி
(செம்மை)



17. கங்கை
(வெண்மை)



18. மகா காளர்
(கருப்பு)



19. யமுனை
(பசுமை)



௨௦. பாசுபதாஸ்திர தேவர்
(செம்மை)



21. அஸ்திர தேவர்
(தீ நிறம்)



22. வாஸ்துப் பிரம்மா
(பொன்மை)



23. சுழுமுனை நாடி
அமைப்பு



24. ஞானக்கினி மூர்த்தி
(செம்மை)



25. பீமருத்திரர்
(செம்மை)



26. சிவகாயத்திரி மூர்த்தி
(வெண்மை)



27. குரு கணபதி
(கருமை)



28. மகாலெட்சுமி
(செம்மை)



29. சப்த குரவர்
(வெண்மை)



30. ஆதார சக்தி
(வெண்மை)



31. பஞ்சாசனம்
பக்கப் பார்வை



மேல் பார்வை



32. அஷ்ட சக்திகள்
(மஞ்சள்)



33. சூரியமண்டலப் பிரம்மா
(பொன்மை)



34. சோம மண்டல விஷ்ணு
(மேகநிறம்)



35. அக்கினி மண்டல
ருத்திரர் (செம்மை)



36. சக்தி மண்டல ஈசுவரர்
(படிகம்)



37. சிவமூர்த்தி (செம்மை)



38. ஈசான முகம்
(படிகம்)



39. தத்புருஷ முகம்
(பொன்மை)



40. அகோர முகம்
(கருமை)



41. வாமதேவ முகம்
(செம்மை)



42. சத்தியோ ஜாத முகம்
(வெண்மை)



43. சிவசாதாக்கியம்
(பசுமை)



44. அமூர்த்தி சாதாக்கியம்
(தீ நிறம்)



45. மூர்த்தி சாதாக்கியம்
(செம்மை)



46. கர்த்திரு சாதாக்கியம்
(செம்மை)



47. கன்ம சாதாக்கியம்
(செம்மை)



48. நிவர்த்தி கலாசக்தி
(மின்னல்)



49. பிரதிஷ்டாகலாசக்தி
(வெண்மை)



50. வித்யா கலாசக்தி
(தீ நிறம்)



51. சாந்தி கலா சக்தி
(கருமை)



52. சாந்தியதீத கலாசக்தி
(வெண்மை)



53. கலைகளின்
அதிட்டான தேவர்கள் (செம்மை)



54. முப்பத்தெட்டுக் கலாசக்திகள்
(பசுமை, பொன்மை, கருமை
செம்மை, வெண்மை)



55. மூலாதார கணபதி
(செம்மை)



56. சுவாதிட்டானப் பிரம்மா
(வெண்மை)



57. மணி பூரக விஷ்ணு
(நீலம்)



58. அநாகத ருத்திரர்
(வெண்மை)



59. விசுத்தி ஈசுவரர்
(தூம்ரம்)






60. ஆக்ஞை சதாசிவர்
(செம்மை)

61. அஷ்டமூர்த்தி அதிபர்கள்
(தங்கம், செம்மை, நீலநிறம், செம்மை, வெண்மை, கருப்பு, வெள்ளை, புகை)




62. சிவலிங்கம்



63. சதாசிவமூர்த்தி
(செம்மை)



64. அங்க மந்திர அதிட்டான தேவர்கள்
([illegible], பொன்மை, செம்மை, வெண்மை, கறுப்பு, நீலம்)



65. மநோன்மணி
(செம்மை)



66. ஈசான தேவர்
([illegible])



67. தத்புருஷ தேவர்
(பொன்மை)



68. அகோர தேவர்
(கருமை)



69. வாம தேவ தேவர்
(செம்மை)



70. சத்தியோஜாத தேவர்
(வெண்மை)



71. அஷ்ட வித்தியேசுவரர்
(பொன்மை, நீ நிறம், மேகம், வண்டு, சிறமை, செம்மை, பவளம், படிகம்)



72. நந்தி தேவர்
(செம்மை)



73. மகா காளர்
(கருமை)



74. பிருங்கி
(வெண்மை)



75. ஆவரண கணபதி
(செம்மை)



76. இடப தேவர்
(வெண்மை)

77. கந்தர்
(பொன்மை)



78. தேவி
(பசுமை)

79. சண்டேசுரர்
(கருமை)



80. இந்திரன்
(பொன்மை)



81. அக்கினி
(செம்மை)



82. யமன்
(கருமை)



83. நிருதி
(சாமமை)



84. வருணன்
(வெண்மை)

85. வாயு
(புகை நிறம்)



86. குபேரன்
(பொன்மை)



87. ஈசானன்
(வெண்மை)



௮௮. பிரம்மா
(பொன்மை)



௮௯. விஷ்ணு
(மின்னல்)



94. பாசாயுதம்
([illegible])



95. துவசாயுதம்
(பொன்மை)



96. கதாயுதம்
([illegible])



97. சூலாயுதம்
(கருமை)



98. பத்மாயுதம்
(வெண்மை)



99. சக்ராயுதம்
(கருமை)



100. பஞ்சாட்சர தேவி
(பொன்மை)



101. வாகீசுவரி
(பசுமை)



102. வாகீசுவரர்
(செம்மை)



103. சிவாக்கினி தேவர்
(செம்மை)



104. சிருக்கு



105. சிருவம்



106. லகுளிசுவரர்
(வெண்மை)



107. சண்டேசுவரர்
(கருமை)




108. பிராசாத கலை வடிவம்

